1241

உ

சிவஷண்முகக்குருவே துணை.

---

ஸ்ரீமான் T. T. சங்கரதாஸ் கம்பெனி
மதுரை பாய்ஸ் கம்பெனி இன்னும் சகல கம்பெனியாராலும்
நடத்தும்

# கற்புக்கரசி அல்லது
# சாவித்திரி டிராமா.

OFFICE OF THE REGISTRAR
14 JUN 1928
MADRAS

இஃது
ராஜபார்ட் M. G. பைரவசுந்திரம் பிள்ளை, A. கோபன்நாயுடு,
E R. ராஜூ முதலியார் மனமோகன M. அரங்கசாமி நாயுடு.
மிஸ். T. R. ராஜலக்ஷிமி, S. G. கிட்டப்பா,
காலஞ்சென்ற அயன் ராஜபார்ட்
P.S ராமசந்திரம் பிள்ளை, திருப்புகழ் குப்புசாமி முதலியார்
இன்னும் பற்பல ஆக்டர்களும் நடத்திவரும்
இந்த சரிதையை

---

சென்னை முத்தியாலுப்பேட்டை ம-ா-ா-ஸ்ரீ,
V. A. தியாகராஜ செட்டியார் அவர்களால்
தற்கால நூதன நாகரீக வர்ண்மெட்டுகளால்
இயற்றப்பெற்று

---

சென்னை
“முராஹரி அச்சுக்கூடத்தில்”
பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை) 1928. (அணா 3

ரிஜிஸ்டெர்ட் காப்பிரைட்.

# ரிஜிஸ்டர் அறிவிப்பு,



இதனால் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில்:— இச்சரித்திரமாகிய சாவித்திரி டிராமா என்னும் புஸ்தகத்தை யான் அதிநூதன வர்ணமெட்டுகளுடன் எழுதி முடிவுபெற்று அச்சிட்டதை. கெவர்ன்மெண்ட் சட்டமாகிய 1867-வது வருடம..கிய 25-வது ஆக்ட் 20-வது பிரிவு 6-வது ரூல்ஸ்படி ரிஜிஸ்டர் காபிரைட் செய்திருப்பதால் இந்த சரித்திரத்தை என் அனுமதியின்றி அச்சிடக்கூடாது மீறி அச்சிட்டால் நான் கோரும் நஷ்டத்திற்குட்படுவீர்.

இப்படிக்கு,

V. A. தியாகராஜ செட்டியார்.

## தந்தசூரணம் (பற்பொடி.)

இது பற்பொடிகளில் சிறந்தது பல் அசைவு, பல்வலி, ஊனி லிருந்து இரத்தம் வருதல், ஈர்வீக்கம், வாய்நாற்றம் முதலிய பல்நோய் களை சௌக்கியப்படுத்தும் இதை வழக்கமாக உபயோகித்துவந்தால் எவ்வளவு வயதானாலும் பல்லுகளுக்கு யாதொருகுறைவும் வராது.

டப்பி 1-க்கு விலை அணா 4. டஜன் 1-க்கு ரூபா 2—8—0

## பாலாமிர்தம்.

குழந்தைகளுக்கு உண்டாகின்ற சகலவிதமான மாந்தரோகங்க ளுக்கும் நெஞ்சு குறுகுறுப்பு, இருமல், கோழைக்கட்டு, சரியாமல் (அஜீர்ணமாக) மலம்போதல், வயிறு உப்புதல், மூக்கிலிருந்து நீர் வடி தல், மூலைப்பாலைக் கக்குதல், மலத்தில் புளிப்பு அதிகமாகுதல் முதலிய வியாதிகளுக்கு இந்தப்பொடி சஞ்சீவிக்குச் சமமாகும் வாரத்தில் இர ண்டு தவணையாக இந்தப் பொடியை குழந்தைகளுக்கு கொடுத்துவந் தால் குழந்தைகளுக்கு யாதொரு ரோகங்களும் வரமாட்டாது குழந் தைகளின் உடம்பும் தெளியும். டப்பி 1-க்கு ரூபா 1.

## ஸ்தம்பனாதிசய குளிகை.

போகம்செய்கின்ற நாளில் இந்த குளிகையை உட்கொண்டால் மன்மதனைப்போலுள்ள தேகசக்தி உண்டாவதோடு இக்குளிகை சம் போகத்தில் ஒருபுதிய ஆனந்தத்தையும் உண்டாக்கும். பரீக்ஷைசெய்து பார்த்துக்கொள்ளலாம். 6-மாத்திரைகள் விலை அணா 8.

## சர்மரோக சங்காரி.

மேகப்பற்று, புழுக்கடி, தடிப்பு, தேமல், சொறிகள், முதலிய தோல் சம்பந்தமான வியாதிகளுக்கு இந்த மருந்தை இரண்டுதடவை பூசினால் அந்த ரோகங்கள் பாம்புச்சட்டை உரிவதுபோல் உதிர்ந்து விடும் எல்லாவித தடிப்புகளும் நிறமாறுதலும் நீங்கும் சரீரம் பழைய நிலைபோல் ஆரோக்கியஸ்திதியைப்பெறும் தடிப்புகளில் உண்டாகின்ற சொறிக்கு இதை இரண்டுதடவை தடவினால் உடனே குணமாகும்.

புட்டி 1-க்கு விலை அணா-8.

## வாதரோகவித்தோம்சினி.

மேகவாய்வு, அண்டவாயு, சரீரம்முழுவதும் பரவி உபத்திரவிக் கும் வாயு, முடக்குவாதம், பாரிசவாயு முதலிய எல்லாவாயுக்களையும் கண்டித்து, கைகால் சந்துக்களில் காணும் வலி, சரீரமுழுதுமிருக்கும் நோய், முட்டுவீக்கம், கைகால் நீட்டவும் மடக்கவும் முடியாமல் காணும் தளர்வாதம் மலபந்தம் தொடைகளிலுண்டாகின்றவலி, உடம்பு குத்தல், அடிக்கடி அபான வாயுப்பறிதல், மேல்மூச்சு, கீழ்மூச்சு, மார் புவலி, ஓடுவாய்வு முதலிய ஒவ்வொருவருடைய சரீரகூறுக்குத் தக்க படி தோன்றுகின்ற சகலவாயுரோகங்களையும் நீக்கி, மலமூத்திரங்கள் தாராளமாகப் போகும்படி செய்து சரீரத்திற்கு ஆரோக்கியத்தைக் கொடுப்பதற்கு இதுவே உத்தமமான திவ்விய ஔஷதமாகும்,

புட்டி 1-க்கு ரூபா 2.

---

**மலையாள சித்த ஔஷத ஆஸ்ரமம்**

**பிராட்வே கொல்லம் திருவிதாங்கூர்.**

உ

வேலுமயிலுக்துணை.

---

ஸ்ரீமான் T. T. சங்கரதாஸ் கம்பெனி
மதுரைபாய்ஸ்கம்பேனி இன்னும் சகலநாடககம்பேனியாரால் நடத்தும்

---

கற்புக்கரசி அல்லது

# சாவித்திரி டிராமா

---

## விநாயகர் வெண்பா.

கீர்த்திமிகும் சாவித்ரி கீதமது யானெழுத
கார்த்திகேயன் சோதரனே கணநாதா—கீர்த்தியுடன்
அன்புடனே உன்பாதம் அனுதினமும்யான் துதித்தேன்
தென்புடனே வந்தெனைக் கார்.



## விநாயகர் துதி.

(ஸ்ரீராமபாதமா என்றமெட்டு.)

பல்லவி.

வேம்படி நாதனே ஓங்காரரூபனே
வேதவிநாயகனே—ஆ—ஆ—ஆ

வே

அநுபல்லவி.

சாம்பவி பாலனே சதுர்மறை மூலனே
சாமிசிவசங்கரனை தான் வலமாய் வந்தோனே — வே

சரணம்.

நம்பினேனுனையே தினம் காரணன் மருகனே
நாடினேன் நளினபதம் தேடினேன் மூஷிகனே
தம்பிரான்சோதரா தனயன் முன்னேவாராய்
கும்பிட்டேனுனையே தியாகன் காத்தருள் மனோகரா — வே

சீன் நெ. 1. இடம்-தர்பார்

கஜகேதுவின் தெய்வதுதி.

(சுஜனஜீவனா என்றமெட்டு.)

பல்லவி.

தணிகை வேலனே—குறத்
தையல் லோலனே—திருத் — த

அநுபல்லவி.

பணிந்தேன் மூலனே—அம்மை
பவனிபாலனே
பரமேஸ்வரன் அருளால்வந்த பரமசீலனே—கோலனே — த

சரணங்கள்.

தோத்திரம் செய்தேனே உந்தன் தொண்டனும் யானே
காத்தருளும் சந்ததமும் கழல் பணிந்தேனே
தரணியில்தானே—தியாக
ராஜனும் யானே
தலமீதினில் நலமாகவே உரைத்தேன் சீமானே—பூமானே — த

கஜகேது-வசனம்.—மந்திரி ஸ்ரீ அகண்டபரிபூரண சச்சிதானந்தராய்விளங்கும் பரம்பொருளின் அருள் குமாரனாகிய சிவ ஷண்முக தேசிகனின் அருளினாலும் எனது பெரியோர்களின் ஆசீர்வாதத்தினாலும் இக்கலிங்கதேசத்தை மிகவும் கீர்த்தியுடன் அரசுபுரிய தொடங்கினன் ஆதலால் நமது

கஜகேது-தரு. இ-ப்-கனடா

தேசத்தின் க்ஷேமத்தை திறமுடனறியவே
நேசமுடனெனக்கு நிகழ்த்துவாய் மந்திரி.

கஜகேது-வ-ம்.—மந்திரி இன்று நமது நகரச்செழிப்பைக்கேட்க யான் அதிக ஆவல்கொண்டிருக்கிறேன் ஆதலால் உனது மனவிரும்பம் எவ்வாறோ

மந்திரி-வ-ம்.—அரசே அடியேன் தாங்கள் கேட்டும் கேள்விகளுக்கு உத்தாரமுரைக்க மிகவும் கடமை பூண்டிருக்கிறேன் ஆதலால் தங்களின் நகரமுழுதிலும் வருணன் திங்கள் மும்மாரி வருஷித்து அதனால் பிரஜைகள் எல்லோரும் அதிகசெழிப்புடன் வாழ்ந்து வருகிறார்கள் அதுவுமன்றி நமது நாட்டிலுள்ள சிவாலயம் விஷ்ணுவாலயம் முதலிய ஒவ்வொரு ஆலயங்களும் ஆறுகாலபூஜையும் அட்டியின்றி நடந்துவருகின்றது தவிரவும் நமது ஆக்ஞைக்குட்பட்ட சிற்றரசர்கள் யாவரும் முன்பாகவே கப்பம்செலுத்திவருகின்றார்கள் ஆயினும் சாலவபுரியை அரசுபுரியும் துயுமச்சேனன் என்பவன் மகாகர்வி அது ஏனெனின் அவனுக்கு புத்திரன் ஒருவனிருக்கின்றான் அவன் மிகவும் பலாட்டியன் அந்த மம்மதையினால் அவன் யான்போய் பகுதிப்பணம்கேட்டதற்கு என்னைக்கடிந்தும் உம்மை இகழ்ந்தும் தூஷித்து என்னை துரத்திவிட்டான்.

கஜகேது-வ-ம்—மந்திரி என்ன விந்தையாயிருக்கின்றது அவன் அவ்வளவு பலாட்டியனா.

மந்திரி-வ-ம்.—அரசே அவனைப்போல போர்வீரன் யாருமில்லை,

கஜகேது-வ-ம்.—மந்திரீ சரி அவன் இப்போது அந்த ராஜியத்திலிருக்கிறானா.

மந்திரி-வ-ம்.—அவன் அங்கு இல்லை,

கஜகேது-வ-ம்.—சரி இதுவே தக்கசமயம் ஆதலால் நீ சென்று போர்வீரர்களையும் சேனைசைன்யங்களையும் சித்தப்படுத்து இதோ யானும் சித்தமாகிறேன்.

## சீன் நெ. 2 இடம்-சாலவபுரி தர்பார்.

துயுமச்சேனன்-விருத்தம்.

வெண்ணிலா தன்னைச்சூடும் விமலனே போற்றிபோற்றி
எண்ணிலா இடரைப்போக்கும் ஈசனே போற்றிபோற்றி
கண்ணியச் செங்கோல்தன்னை நாளுமே அரசுசெய்யும்
மன்னன்யான் துயுமச்சேனன் பலரடி போற்றி போற்றி.

துயுமச்சேனன்-வ-ம்—மந்திரி அச்சண்டாள கஜகேது நம்முடைய நாட்டின்மீது படை எடுத்து வந்ததாக நமது சேனாதிபதி இங்குவந்து உரைத்துப்போயினர் இதற்குத் தக்கயோசனை என்ன செய்வது.

மந்திரி-வ-ம்—அரசே போரிடவந்தவனை புறமுதுகாட்டி ஓடச் செய்வதுதான் அரசர்க்கழகு ஆதலின் நம்மிடம் எதிர்த்துப்போர் புரிய அஞ்சாத சேனாதிபதிபிருக்க நாம் அஞ்சுவானேன்.

துயுமச்சேனன்-வ-ம்,—ஹா ஜெகதீசா என்னசெய்வேன் அப் பாவி மிகவும் கொடுங்கோல் மன்னனாச்சுதே எம்மை லேசில்விடானே எதிர்த்து போர்புரியவும் எனது மைந்தனாகிய சத்தியவானும் எனதரு கில் இல்லையே.

துயுமச்சேனன்-தரு.

(போருக்கு அஞ்சாத போர்வீரன் என்றமெட்டு.)

சண்டாளகஜகேது சமருக்குவந்தானே
சாமிசங்கரனேயுன் சதிபினைவோதோனேன்
சுதனுமில்லையே துடிக்குதே என்திரேகம்
சோருதென் செய்வேன் தனையன்யானே

மந்திரி-தரு.

(இஷ்கல்மே பேகல்மே என்றமெட்டு.)

மன்னனே உந்தன் மனது கலங்காதே
மைந்தனை இத்ததிதானழையுமே
சொன்னயமாகமேரீரும்—மிக
துயரமுரவேண்டாம் பாரும் ம

மந்திரி-வ-ம்—அரசே எதிரிகளின் படைகளோ மூலபலம்போல் முற்றிலும் வளைத்துக்கொண்டிருக்கிறார்கள் இன்னும் சிலது நேரத் திற்குள் அத்துமீறி உட்பிரவேசித்து விடுவார்கள் போல் தோன்று கிறது இதற்குள்ளாக மணிபுரத்திற்கு சென்றிருக்கும் தங்கள் புதல் வனை அழைத்துவர உத்தாரம் செய்யுங்கள்.

துயுமச்சேனன் வ-ம்—மந்திரி இவ்வித ஆபத்துகாலத்தில் யாரை யனுப்புவது.

மந்திரி வ-ம்—அரசே நமது விகடக்களஞ்சியமாகிய மாடவ்யனை அனுப்பினால் அவன் எவ்விதமேனும் சென்று உமது புத்ரனை அதிசீக் கிரத்தில் அழைத்துவருவான்.

(சேனாதிபதிபோகிறான் மாடவ்யன் வருகிறான்.)

மாடவ்யன் வ-ம்—பிரபு மாடவ்யன் வந்தனம் இவ்வடியேனாகிய எம்மை இதுநாளன்றி இப்போது அழைத்தகாரணம் யாது.

துயுமச்சேனன் வ-ம்—மாடவ்யா உன்னால் எனக்கு ஒருகாரியம் ஆகவேண்டி இருக்கிறது அதின்பொருட்டுநான் உன்னை அழைத்தனன்.

மாடவ்யன் வ-ம்—அரசே ராஜகிரீடாதிபதிகளாகிய தங்களால் நடவாதகாரியம் இப்பஞ்சையாகிய எம்மால் என்ன நடக்கப்போகிறது என்னால் நடக்கப்பட்ட காரியமாயின் யான் தங்கட்கு கட்டாயமாக உதவி புரிகிறேன் அதை சற்று விரிவாய் உரையுங்கள்.

துயுமச்சேனன் வ-ம்—மாடவ்யா உன்னால் கட்டாயமாக அக்காரியம் நடக்கக்கூடும் அதாவது நீ மணிபுரததுக்கேகி எனது புதல்வனாகிய சத்தியவானை அதிசிக்கிரமாக இங்கு அழைத்துவருவாயேல் இங்கு வந்திருக்கும் சத்துருக்களை வதைத்தெரிவான அதனால் உனக்கும் மிக்கபெருமையுண்டாகும் அட்டியின்றி சீக்கிரம் சென்றுவா.

மாடவ்யன் வ-ம்—ஐயையோ அவ்வேலை ஒன்றுமாத்திரம் என்னால் முடியாது, பாருங்கள் எதிரிகளின் சேனைகள் ஈ நுழையக்கூட இடம்விடாமல் தங்கியிருக்கின்றார்கள் நான் எப்படி வெளியில் செல்லக்கூடும் அப்படி நான் வெளியில்செல்வதை பார்த்துவிட்டால் அவர் கையிலிராநின்ற கத்திக்கு இரைதான் ஆதலால் அக்காரியம் ஒன்று மாத்திரம் என்னால் முடியாது.

துயுமச்சேனன் வ-ம்—மாடவ்யா அவ்விதம் சொல்லாதே இக்காரியம் கட்டாயம் உன்னால் நடக்கும் நீதான மிக்க தந்திரசாலி ஆதலால் இவ்வேளையில் விகடம் செய்யாமல் சீக்கிரம் செல்.

(மாடவ்யன் போகிறான் கஜகேது படைகளுடன் வருகிறான்.)

கஜகேது—தரு.

(துரிதமாகவே என்ற வர்ணமெட்டு.)

ஜல்தியாகவே துயுமச்சேனனை
துள்ளியலரி மடியும்படி துருசாய் கட்டுவீர் ஜ
இவன்-அரண்மனைக்கேகி அரசிலையத்தாக்கி
அரசன்யானு மழைத்தேனென்று அழைத்துவா நோக்கி ஜ
சென்றுவா மந்ரி தடையது யின்றி
சண்டாளர் இருவரையும் தகிப்பதே நன்று ஜ

கஜகேது வ-ம்—அடே சேவக் இச்சண்டாளனையும் இவனுடன் சேர்ந்த மந்திரிகளையும் சிறையிலடையுங்கள் அதுவும் தவிர இவன் பத்தினியாகிய பத்மாக்ஷியையும் கட்டியிழுத்து வாருங்கள்.

துயுமத்சேனன் வ-ம்.—அடே துஷ்டா நானென்ன குற்றஞ்செய்தேனென்று என்னை சிறையிலடைக்கப்போகிறாய் இவ்விதமெல்லாம் தீங்கு புரிவது உன் அரசிற்கு நீதியா இச்சமயம் என்மைந்தன் அருகிருப்பானாகில் உன்கதி அதோகதிதான் உன் நல்லகாலம் அவன் என்னருகில் இல்லாமற் போய்விட்டான் வீணாக தள்ளிப்போகாதே.

கஜகேது வ-ம்—அடே சண்டாளா எனக்கு செலுத்தவேண்டிய பகுதியை சரிவர செலுத்தாமல் வீண்கர்வமாகவா பேசினாய் அடே வீரர்களே இவன் அணிந்திருக்கும் முடியையும் வாளையும் ஆடையாபரணங்களையும் கழற்றிக்கொண்டு இந்த பத்மாக்ஷியையும் துயுமத்சேனனையும் கண்ணைக்குத்தி அத்வான கானகத்தில் விட்டுவாருங்கள்.

விருத்தம்,

எதிரிலாது அரசுசெய்யும் ஏத்தலே ராஜபூபா
சதியது என்னசெய்தோம் தண்டனை விதித்தீரையா
நிதியுடன் எங்கள்கண்ணை நீருமே பேர்க்கச்சொன்னால்
விதியது எங்களுக்கு வேறில்லை ரக்ஷிப்பீரே.

கஜகேது வ-ம்—சட் ஒன்றும் பேசாதீர்கள் அடே வீரர்காள் இவர்களை தள்ளிச்செல்லுங்கள்.

(துயுமத்சேனனையும் பத்மாக்ஷியையும் வீரர்கள் அழைத்துச் செல்கிறார்கள்.)

## சீன் 3 இடம்-கானகம்

துயுமத்சேனன் } வசனம்.—ஆ ஜெகதீசா அப்பாவியாகிய சண்
பத்மாக்ஷி }

டாள கஜகேது எங்களின் நாட்டை பரித்ததுமன்றி எங்களையும் இவ்வித இம்சைக்குள்ளாக்கினானே கண் தெரிந்தாலும் எவ்வூரிலாகிலும் சென்று பிழைக்கலாம் எங்களின் கதிதான் இவ்விதமெனிலோ மைந்தனின் கதி எவ்வாறாகுமோ ஆ! கைலைவாசா திக்கற்ற எங்களை நீதான் காப்பாற்றவேண்டும்.

(நீதிநெறியுணர்ந்த என்றமெட்டு)

என்னபழி செய்தோம் யாங்கள் இக்கதிவைத்தாய் சிவமே
கண்ணிழந்து கானகத்தில் கதறலானோம் சிவமே
பாவிகஜகேது வெங்கள் பட்டந்தனையே சிவமே
மேவிப்பரித்து எம்மை மிகவும் இம்சித்தான் சிவமே
மைந்தனை தனியேவிட்ட மாபாவியாங்கள் சிவமே
இந்த வேளை யாதரிக்க வாதுசெய்வதேன் சிவமே
தினந்தினமும் தருமம்செய்தும் தீம்புநேர்ந்ததே சிவமே
மன்துலைத்து காத்தருள மர்மமாகுமோ சிவமே

## ஸீன் 4 இடம்-நந்தவனம்

சத்தியவான்-வ-ம்—மாடவ்யா நாம் நெடுந்தூரமிருந்து வந்தமையால் நம்முடைய புரவிகளுக்கு அதிகஷ்டம் வைத்துவிட்டோம் ஆதலால் நமது புரவிகளை அடுத்தகானகத்திலுள்ள தடாகத்திற்கழைத்துச்சென்று நீரருந்தச் செய்யவேண்டும்.

மாடவ்யன் வ-ம்—இளவரசே என்குதிரைக்கு நான் கஷ்டம் வைக்கவில்லை ஏனென்றால் நாம் வரும்போது ஓர்விதசுழற்காற்று் விசியதே அந்த காற்று வேகத்திலேயே அதுவந்தது

சத்தியவான் வ-ம்—என்ன மாடவ்யா உனக்கு எந்தநேரமும் இதே விளையாட்டுதானா

மாடவ்யன் வ-ம்—சரி இளவரசே நாம் இப்போது குதிரைமீதேறிவந்ததால் நமக்கு கஷ்டமா அலலது நம்முடைய குதிரைகட்கு கஷ்டமா

சத்யவான் வ-ம்—குதிரைகட்குதான் கஷ்டம்

மாடவ்யன் வ-ம்—இல்லை இல்லை நமக்குதான் அதிகஷ்டம்

சத்யவான் வ-ம்—மாடவ்யா என்ன வேடிக்கையாயிருக்கிறது அதெப்படி நமக்கு கஷ்டம் ஏற்படும்

மாடவ்யன் வ-ம்—இளவரசே உண்மைதான் மொழிந்தேன் ஏனென்றால் என்குதிரை ஓடத் தொடங்கிவிட்டால் "ஐந்துலக்ஷம் லகான்கள் பஞ்சுபோல் பாந்தாலும் அஞ்சாமல் வைக்குமொருகால்" அதுதானா இன்னும் என்குதிரையின் பெருமையைப் புகலுகிறேன் கேட்டு வாருங்கள்

வெண்பா

" நன்னயமாய் நான்குபேர் நலமுடனே தொட்டிழுக்க
பின்பக்கம் ஐந்துபேர் தள்ள—இன்பமுடன்
ஒன்பதுபேர் இழுத்தாலும் ஓடாத என்புரவி
இந்நிலத்தில் வந்ததுபாரிங்கு

மாடவ்யன் வ-ம்—இவ்வளவு குணமுள்ள நீலவேணி புரவி இருந்தால் எனக்கு கஷ்டமா குதிரைக்கு கஷ்டமா தாங்களே கூறுங்கள்

சத்யவான் வ-ம்—மாடவ்யா என்ன கேலியா செய்கின்றாய்

மாடவ்யன் வ-ம்—இல்லை இல்லை உண்மைதான் புகன்றேன்

சத்யவான் வ-ம்—சரி இருக்கட்டும் நம் குதிரைகட்கு ஜலமருந்தச்செய்து அழைத்துவா

மாடவ்யன் வ-ம்—இளவரசே தங்களுக்கென்ன கொஞ்சமாகிலும் இரக்கமில்லையே எனக்கு பசியோ அதிகரிக்கின்றது இந்த பாழானகுதிரையின்மீது ஏறினசுகம் என் உடம்பெல்லாம் வலிக்கிறது என்னைபோகச்சொல்கிறீரே

சத்யவான் வ-ம்—அப்படியா சரி யான் சென்று ஜலமருந்தச்செய்து வருகிறேன்

மாடவ்யன் வ-ம்—இளவரசே கோபிக்கவேண்டாம் நானே சென்று வருகிறேன் தாங்கள் இங்ஙனே இருங்கள்

(மாடவ்யன்போகிறான் சாவித்திரி சகிகளுடன் வருகிறாள்)

சாவித்திரி-தரு,

(காகூடிதண்காகூடியே என்றமெட்டு)

பல்லவி

என்ன சிங்காரமே இந்த நந்தவனமும் எ

அநுபல்லவி

எந்தன் பின்னே எல்லோரும் அந்தமுடனே வாரும் எ

சரணம்

எங்குமே புகழமயில் இன்பமுடன் ஆடுதே
கும்பலாக மான்களெல்லாம் கூடி அதோ ஓடுதே
பொங்கமாய் குயிலினங்கள் மங்களமாய் பாடுதே
சங்கையின்றி மந்திகளும் மரந்தனிலே ஜாடுதே
மல்லிகை இருவாகூடி மின்ஜோதி—இன்னும்
மெல்லிய பாரிஜாதத்தின்கிபாதி—அதை நாம்
வல்லமையுட னணிதல் நீதி—வளம்
செல்லத்தரமோ எந்தனால் தாதி
தாமதம்செய்யாதே
தாதிகளிப்போதே
சந்தோஷமாய்கோதே
தான்குளிப்போம்மாதே எ

சாவித்திரி வ-ம்—சகி இந்த நந்தவனத்தின் அலங்காரத்தைப் பார்த்தனையா ஹா எத்தன்மையான குளிர்ந்தவாடை வீசுகிறது அதுவுமன்றி அந்த ரோஜாபுஷ்பச் செடியானது எவ்வளவு செழிப்புடன் புஷ்பித்து இருக்கின்றது தென்றலோ அதிக குதுகலத்திற்கிடம் தருகிறதல்லவா

சகி வ-ம்—தேவி ஆம் இவ்வனம் அதிக அழகாகத்தான் இருக்கின்றது ஏனென்றால் இது வசந்தகாலமல்லவா (சகி திரும்பிப்பார்த்து) தேவி யாரோ இரண்டுபுருஷர்கள் வருகின்றார்கள் அவர்கள் இவ்விடம் வருவதற்குள் நாம் ஜலக்கிரீடையாடி சீக்கிரம் அரண்மனைக்கேகலாம்.

சாவித்திரி வ-ம்—ஆம் சகி அதோ வருகின்றார்களே அவ்விருவர்கள் யாராயிருக்கலாம்

சகி வ-ம்—அம்மணி அவ்விருவரில் ஒருவர் அரசகுமாரன் போன்றும், மற்றொருவர் அன்னவருக்கு தோழன்போலுமிருக்கின்றது.

சாவித்திரி வ-ம்—சகி ராஜகுமாரன் என புகன்றனையே அவர் எவ்வித ரூபலாவண்யத்துடன் இருக்கின்றார் பார்த்தனையா அந்த நான்முகன் இவ்வித உருவத்தை எத்தனை நாட்களாக எவ்வளவு சிரமத்துடன் செய்தாரோ.

சகி வ-ம்—தேவி அவர் எவ்வித அழகாய் இருந்திடில் நமக்கென்ன நாம் வந்து வெகு நேரமாகின்றது ஆதலால் வாரும் சீக்கிரமாக ஜலக்கிரீடையாடி அரண்மனைக்கேகலாம்.

சாவித்திரி வ-ம்—சகி இவ்வனத்தைவிட்டு வருவதற்கு என் மனம் கொஞ்சமேனும் இடந்தரவில்லை.

சகி வ-ம்—அரசி உனக்கோ யௌவனமென்னும் வாலிபப்பருவம் வந்துவிட்டது மேலும் நீ விவாகமாகாதவள் ஆண்பிள்ளைகளின் கண்ணில் அகப்படக்கூடாது அதுவும் தவிர உன் தாய்தந்தையர்கள் அறிந்தால் மிகவும் கோபிப்பார்கள் ஆதலால் வா சீக்கிரம் நமது அரண்மனைக்கேகலாம். (எல்லோரும் போகிறார்கள் சத்தியவான் வருகிறான்)

சத்தியவான் வ-ம்—ஹா இது என்ன விந்தையாக யிருக்கின்றது இவ்வனம் யாருடைய வனமாக இருக்கலாம்.

சத்தியவான்-தரு.

(கல்யாணம் செய்துவையுமே என்றமெட்டு.)

பல்லவி.

ஆஹா இவ்வனப்பெருமை
அதிவுன்னத அருமை ஆ

அநுபல்லவி.

அல்லியும் தாமரை அதின் மணம் வாசம்
அழகு மல்லிகை ரோஜா வாடையே வீசும்
புள்ளிமான் கும்பலாய் போவதுல்லாசம்
புகலவென்று லென்தன் மனமது கூசும் ஆ

தேவர் முனிவர்களின் வனமிது தானே
திகைத்து மிரளுதெந்தன் மனதோன்றும் தோணேன்
யாவர்களுமிதின் அதிசயந் தானே
அறிந்திடில் மனமகிழ் கொள்ளுவார் கோனே ஆ

சாலையாய் சந்தன மரத்தின் சிங்காரம்
சாதுர்யமாய் பேசும் கிளிகளின் நேரம்
சோலை யிதனைப்போல யான்காணேன் பாரும்
சொகுசுடன் யிதின்வளம் உரைக்க ஒய்யாரம் ஆ

மரமதின் மேல்நின்று மாங்குயில் பாட
மயில்கள் தோகையதனை விரித்து நின்றாட
சிறப்புடன் தென்றலும் தினந்தினம்மீட
தீங்குள்ள மிருகங்கள் இதைகண்டு ஓட ஆ

சத்தியவான் வ-ம்—ஆஹா இவ்வனம் எவ்வளவு அதிசயமுடன் குளிர்ச்சியாயுமிருக்கிறது, அதோ தெரிகின்ற அனேகவித மா, பலா, கமுகு, மாதுளை, கொய்யா, கமலா, இன்னும் அனேகவித அழகுள்ள மரங்களெல்லாம் இடைக்கிடையே நெருங்கி எவ்வளவு உன்னதமாக இருக்கின்றது இன்னும் இதனுடன் அனேகவித புஷ்பச்செடிகளின் வாசனையோ என்மனதைக் கமழுகின்றது இவ்வனத்தின் அதிசயத்தைப் பார்க்கப்பார்க்க இவ்வனத்திலேயே சஞ்சரிக்கலாமென என் மனது நோக்குகின்றது குதிரைகட்கு ஜலமருந்தச் செய்யப்போன மாடவ்யனும் இன்னும் வரக்காணோம் ஆதலின் அதோ தெரிகின்ற சலவைக்கல் மேடைமீது சற்றுசயனிக்கலாம்.

(சத்தியவான் மேடைமீது சயனிக்கப்போகும் சமயம் சாவித்திரியை சிங்கம் துரத்திவருகின்றது)

சாவித்திரி வ-ம்—ஐயோ சொக்கேசா என்னசெய்வேன் சிங்கம் துரத்தி வருகின்றதே இவ்வேளையில் என்னை யார்வந்து காப்பாற்றப் போகிறார்கள்.

சத்தியவான் வ-ம்—ஹா ஏதோ பெண்குரல் கேட்கின்றதே.

சத்தியவான் தரு.

ஆ ஹா ஹா சிங்கமது அதோ பெண்ணை பாயுதே
ஓ ஹோ ஹோ இத்தநியே ஓடியானும் மாய்க்குரேன்
இப்போதிதின் மதத்தை என்னவென புல்குவேன்
தப்பாததனை தனித்துயிரை கொல்லுவேன்

சத்தியவான் வ-ம்—ஆஹா அத்துஷ்டசிங்கம் பாவம் அந்த பெண்மணியைக் கொல்ல துரத்திச்சென்ற சமயத்தில் அதைக்கொன்றோமல்லவா நம் கரத்தில் ஒருவித ஆயுதமும் இல்லாமலேயே அதைக் கொன்றோமே எவ்விதமாகத்தான் கொன்றேனோ அது எனக்கே ஆச்சரியத்தை விளைவிக்கின்றது அச்சமயத்தில் நாம் அதை கொல்லாவிடில் அப்பெண்மணியின் கதி என்ன ஆனால் நமக்கு மிகவும் களைப்புண்டாக்குகின்றது சிறிதுநேரம் இம்மேடைமீது சயனிக்கலாம்.

(சத்தியவான் மேடைமீது சயனிக்கின்றான் சாவித்திரி வருகிறாள்)

சாவித்திரி வ-ம்—என்னைத்துரத்திக் கொல்ல வந்த அந்த துஷ்டசிங்கத்தை மாய்த்த ராஜகுமாரன் யாரோ தெரியவில்லையே, அவர் அச்சமயம் அக்கேசரியை மாய்க்காவிடில் என்கதி என்னவாகுமோ அவர் அதைக்கொன்றுவிட்டு எங்குச் சென்றனரோ தெரியவில்லையே எவ்வழியாகச் சென்றிருப்பார் (திரும்பிப்பார்த்து) ஹா அதோ அம்மேடைமீது சயனித்திருப்பவர் அவர்தான்போல்தோன்றுகிறது அருகில்சென்று பார்க்கலாம் (அருகிற்சென்று) பேஷ் இவரென்ன மன்மதப்பிரப்போ அல்லது அச்சிருஷ்டிகர்த்தா என்பொருட்டே இப்பூவுலகில் சிருஷ்டித்தாரோ ஆஹா என்ன அழகு என்ன ரூபலாவண்யம் எவ்வித ஒய்யாரமாய் சயனித்திருக்கின்றார் ஆஹா இவர்.

(கபுடாலே நாலே என்றமெட்டு)

பல்லவி.

யாரோ யாரோ இவர் எந்த ஊரோ என்னதான் பேரோ
யானறியேனே எந்தனை ஆதரித்தானே

அநுபல்லவி.

சீறிவந்த சிங்கந் தன்னை  அறிகொன்ற மன்னவர்
மகிழ்வாக மனம் நோக  வெகு சோக மாகவே
தனித்து தரைதனில்  துணிந்து படுத்தவர்  யா
இன்னவர் வராவிடிலோ எந்தனுயிர் போகுமே
இப்பெண்டு என்ன தொண்டுசெய்வேன் கண்டு யான் விண்டு
எழுப்பி யிவர் வாழும் இடமது தெரியலாம்  யா

(சாவித்திரி சத்தியவானை எழுப்ப முயலுகிறாள்)

சாவித்திரி வ-ம்—ஐயோ பாவம் நம் பொருட்டுதான் இவர் இவ்வித களையால் இப்பாறைமீது சாய்ந்தனர்போலும் இவரை எழுப்பி இவரது விர்த்தாந்தங்களை அறிந்துகொள்ளலாம் இராஜகுமாரா இராஜகுமாரா

(சத்தியவான் திடுக்கிட்டு எழுந்திருக்கிறான்)

சத்தியவான் வ-ம்—ஹா மாடப்பா என்னை ஏன் எழுப்பினாய் என்னை எழுப்பிவிட்டு மறைந்தனையே என்னேரமும் உனக்கு இதே விளையாட்டுதானா.

சாவித்திரி வ-ம்—இராஜகுமாரா யாரைத் தேடுகின்றீர் யான்தான் உம்மை எழுப்பினேன்.

சத்தியவான் வ-ம்—ஏ பெண்பாவாய் நான் சயனித்திருக்கும் சமயம் தனியாக வந்து

(ஏனோ எனை யெழுப்பலானாய் மடமானே என்றமெட்டு)

சத்தியவான் தரு.

இவ்வேளை தன்னில் எனை எழுப்பினதேன் மாதே
இன்பமுட னெந்தனுக் குரைத்திடுவாய் கோதே

சாவித்திரி வ-ம்—யானோ இங்கு என் சகிமார்களுடன் இந்த சிங்கார வனத்தைப் பார்க்க வந்தேன் அச்சமயம் என்னுடன் வந்த சகிமார்கள் சில காரணத்தின் பொருட்டு என்னைத் தனியாகவிட்டு அகன்றனர் அத்தருவாயில் என்னை துரத்திவந்த மகத்தகேசரியைக் கொன்று

சாவித்திரி தரு ஷை மெட்டு.

ஆபத்தை தீர்த்து என்னை ஆதரித்ததாலே
அன்புடனே தேடிவந்தேன் உந்தனையிவ்வேளை

சத்தியவான் வ-ம்—பெண்மணி அச்சிங்கத்தைக் கொன்றதினால் என்னைத் தேடிவந்ததாக கூறுகின்றாய் ஆதலால்

சத்தியவான் தரு ஷை மெட்டு

உந்தனை ஈன்றெடுத்த தந்தை தாயின்பேரும்
சொந்தமுடன் நீ உரைப்பாய் உந்தனிட ஊரும்

சாவித்திரி வ-ம்—நானிருப்பதா சொல்லிவருகிறேன் கேளுங்கள் அதாவது இவ்வனத்தைச் சேர்ந்த

(சாவித்திரி தரு ஷை மெட்டு)

மத்ராபுரி தன்னையாளும் அஸ்வபதி புத்ரி
மன்னவனே என்னை பாரில் மொழியும் பேர் சாவித்திரி

சத்தியவான் வ-ம்—ஏ பெண்பாவாய் உன்னை நோக்கில் யௌவனம் வந்தும் மணமாகாதவள் போல் தோன்றுகிறது ஆதலால்

(சத்தியவான் தரு ஷை மெட்டு.)

மணமுனக்கு ஆனதோ காண் மங்கையரே கூரும்
மகிழ்ச்சியுடன் உன்னைகேட்க மனதுவைத்தேன் பூரும்

சாவித்திரி வ-ம்—ஐயா தாங்கள் கேட்கும் கேள்விகளுக்கு தகுந்த பதில்

(சாவித்திரி தரு ஷை மெட்டு)

சொல்லிவாரேன் கேளுமையா கல்லியாணமில்லை
சுந்தரரே எந்தன்பிதா தான் முடிக்கவில்லை

சத்தியவான் வ-ம்—ஆனல் மயிற்சாயலைப்போன்ற மங்கையே உனக்கு தகுந்த பிராயம்வந்தும் இன்னுமா உன் தாய்தந்தையர் மணம் செய்யாதிருக்கிறார்கள் ஆதலின் உனக்கு இந்த

(சத்தியவான் தரு ஷை மெட்டு)

மண்ணுலகில் இராஜமன்னர் யாவர்மீது பாசம்
மங்கையரே இத்ததி உரைத்திடுவாய் நேசம்

சாவித்திரி வ-ம்—ஐயா எனக்கு யார்மீதுமிச்சையில்லை ஆனல்,

(சாவித்திரி தரு ஷை மெட்டு)

தரணிதன்னை யாளுகின்ற துயுமச்சேன மன்னன்
தன்புதல்வன் சத்யவான்மேல் ஆசையுண்டு சொன்னேன்

சத்தியவான் வ-ம்—ஆ என்ன ஆச்சரியமாயிருக்கின்றது அந்த சத்தியவானுக்கும் உனக்கும் ஆதியில் ஏதாவது பிரதிக்கினையுண்டா

சாவித்திரி வ-ம்—இல்லை இல்லை எதற்காக அவர்மீது காதலுற்றேனென்றால் அவர் அழகில் மன்மதனுக்கு ஒப்பாகவும், சத்தியநெறியிலும் தயை தாக்ஷபண்யத்திலும் அரிச்சந்திரனுக் கொப்பாகவும் மிக்கவும் வீரத்தன்மை வாய்ந்தவரெனவும் கேள்வியுற்றிருக்கிறேன் அதின் பொருட்டுத்தான் அவரையே மணக்கவேணுமென்பது என்னுடைய கருத்து.

(சத்தியவான் தரு.)

ஆஹா நானே சத்தியவந்தன் நங்கையரே

சாவித்திரி வ-ம்—நாதா தாங்கள் யாரோவென இதுவரையிலும் நினைத்திருந்தேன் ஆதலின் தாங்களே இப்போது

(சாவித்திரி ஷை பாட்டுதொடர்)

கோனே நான் கும்பிட்டு கோரிநின்ற தெய்வம்
கூசாமல் வந்ததுபோ லாச்சுதே

சத்தியவான் தரு.

மானே கலங்காதே மாங்குயிலே

சத்தியவான் வ-ம்—கண்மணி என்னே என் தகப்பனர் வெகு துரிதமாக வருகும்படியாக எனது நேசனை அனுப்பினர் யானும் வந்தேன் இங்கு உன்னைக்கண்டேன் அதனல் மிகுந்த ஆனந்தம்கொண்டேன் ஆதலின் யான் போய் இன்னும் சில தினங்களுக்குள் இங்கு வந்து உன்னையே மணம் சூட்டுகிறேன் அதற்காக நீ கொஞ்சிற்றேனும் மனதில் வருத்தமுறாதே.

சாவித்திரி வ-ம்—நாதா கணவன் தாங்கள்தான் என அறிந்துக் கொண்ட பிறகு யான் எவ்விதமாக உம்மைவிட்டு பிரிந்திருப்பேன்.

சத்தியவான் வ-ம்—எனது ஆசைக்குகந்த மயிலே நீ யாதொன்ருக்கும் வருத்தமுறவேண்டாம் யான் என்னுடைய தாய் தந்தையர் களைக்கண்டு பிறகு அதி துரிதமாக வந்துவிடுகிறேன்.

சாவித்திரி வ-ம்—நாதா தாங்கள் அட்டியின்றி சென்று வாருங்கள் ஆனல் இவ்வடியாளுக்கு வரமொன்று அளித்து பிறகு செல்லுங்கள்.

சத்தியவான் வ-ம்—என்ன வரம் வேண்டும் கண்மணி நீ சற்றும் அஞ்சாது கேள் யான் தருகிறேன்.

சாவித்திரி வ-ம்—நாதா யானே இன்று தங்களுக்கு மனைவியாகி விட்டேன் ஆதலால் என் பதிவிரதா தன்மைக்கு பங்கம்வாராமல் காப்பாற்றவேண்டியது தங்களின் கடமையாகும் அன்றேல் என் உயிர் அந்தகதூருக்கு ஆளாகும் இதுவே சத்தியம் ஆதலால் உன் தாய் தந்தைமார்களை கண்டவுடன்

சாவித்திரி தரு.

(தக்க பாராங்கல்லை தூக்கி என்றமெட்டு)

என்னசை நீ மறக்காதே—இந்த
ஏந்திழை சொன்னேனிப்போதே—எந்தன்
மன்னவனே வேறு சூதே—செய்தால்
மாண்டு மடிவேன் தப்பாதே எ

சத்யவான் தரு.

ஆசை மறப்பதுமில்லை—உன்
அன்னை தந்தை கண்டால் தொல்லை—உன்மேல்
நேசமாய் வாரேன் யான் மெள்ள—பெண்ணே
நீ நம்புவா எந்தன் சொல்லை ஆ

சாவித்திரி தரு.

சீக்கிரமாக நீர் வாரும்—வந்து
சேயிழையாளெனைச் சேரும்—எந்தன்
மோகக்கனை தனைத் தீரும்—இந்த
மெல்லியரைக் கண்ணால் பாரும் சீ

சத்தியவான் தரு.

தந்தை தாய்மார்களைக் கண்டு—வந்த
சங்கதிகளை யான்விண்டு—வெகு
அந்தமுடனுனைக்கொண்டு—பின்னால்
அணைந்து சுகிக்கலாம் பெண்டு த

சத்தியவான் வ-ம்—என் காதலுக்கிசைந்த கண்மணி நான் சென்றுவரும் வரையிலும் நீ ஒன்றும் துயரமுறாதே யான் என் தாய் தந்தையர்களைக் கண்டு அதி சீக்கிரத்தில் இங்கு வந்து கட்டாயமாக உன்னை மணம் சூட்டுகிறேன்.

(சத்தியவான் சாவித்திரியை முத்தமிடுகிறான் மாடவ்யன் வருகிறான் சாவித்திரியும் சத்தியவானும் செல்கிறார்கள்)

## சீன் 5 இடம்-அடவிவழி

மாடவ்யன் வ-ம்—இளவரசே இவ்வளவு நேரம் வரையில் எங்குச் சென்றீர் அப்பப்பா உன்னை எவ்வளவு நேரமாக தேடித்திரிவது போதுமையா உன்னுடன் வந்த சுகம் எனக்கு.

சத்தியவான் வ-ம்—மாடவ்பா நான் எங்கும் செல்லவில்லை ஓர் யுவதியை ஓர் சிங்கம் கொல்லவந்தது அதனிடம் இவ்வளவு நேரம் சண்டையிட்டு கடைசியில் அதை மடித்து ஓடத்திவிட்டேன்.

மாடவ்யன் வ-ம்—ஆஹா சிங்கமா இளவரசே அது சிறிதா பெறிதா.

சத்தியவான் வ-ம்—மாடவ்பா அச்சிங்கம் அதிக பெரிதாகவே தான் தோன்றியது.

மாடவ்யன் வ-ம்—இளவரசே பேஷ் பேஷ் அது ஆணா பெண்ணா

சத்தியவான் வ-ம்—மாடவ்யா அதையெல்லாம் யான் என் கவனிக்கப்போகிறேன்.

மாடவ்யன் வ-ம்—சரிதான் தாங்கள் அதை கவனிக்கவில்லையா அது பெண்சிங்கமாகத்தானிருக்கும்.

சத்தியவான் வ-ம்—என்ன மாடவ்யா விந்தையாக யிருக்கிறது இதெல்லாம் உனக்கு எப்படித்தெரியும்

மாடவ்யன் வ-ம்—இளவரசே தாங்கள் சொல்லும் சொற்களாலேயே விளங்குகிறதே சரி அது ஆடையாபரணங்களை அணிந்து வாய் திறந்து மொழிந்ததா என்ன.

சத்தியவான் வ-ம்—மாடவ்யா எச்சமயத்திலும் உனக்கு இதே விளையாட்டுதானு.

மாடவ்யன் வ-ம்—இளவரசே கோபிக்காதீர் வேடிக்கைபார்த்தமாய் கேட்டேன்,

சத்தியவான் வ-ம்—மாடவ்யா ஏன் ஒருவாருய் நின்றுக்கொண்டிருக்கிருய்.

மாடவ்யன் வ-ம்—இளவரசே வேறொன்றுமில்லை என் மனதில் ஒரு சந்தேகம் பாதிக்கின்றது.

சத்தியவான் வ-ம்—அது என்ன சந்தேகம் மாடவ்யா.

மாடவ்யன் வ-ம்—சிங்கத்தை ஜெயித்ததாக தெரிவித்தீரே உம்மை அச்சிங்கம் ஜெயித்ததா அல்லது நீர் அதை ஜெயித்தீரு.

சத்தியவான் வ-ம்—சட் வீண்வார்த்தைகளெல்லாம் உரையாதே.

மாடவ்யன் வ-ம்—என்ன இளவரசே இன்னமும் மறைத்து பேசுகின்றீரே .

சத்தியவான் வ-ம்—சரி இவன் தெரிந்துகொண்டுதான் நம்மிடம் வார்த்தையாடுகிருன்போல் தோன்றுகிறது மாடவ்யா நீ நம்முடைய குதிரைகட்கு ஜலமருந்தச்செய்யப் போனபிறகு யான் இங்ஙனேயிருந்தேன் அசசமயம் ஒரு பெருத்த கேசரி ஒரு யுவதியை கொல்ல துறத்திச் சென்றது அச்சமயத்தில் யான் அதைக்கொன்று அப்பெண்மணியை காப்பாற்றினேன்.

மாடவ்யன் வ-ம்—பிறகு.

சத்தியவான் வ-ம்—அந்த கேசரியை கொன்ற அலுப்பினுல் அதோ அந்த சலவைக் கற்பாறைமேல்சற்று அயர்ந்தேன் அந்தப்பெண் என்னை எழுப்பினுள் அவளுடைய விர்த்தாந்தமெல்லாம் அறிந்தேன் நீ சென்ற இடத்தில் ஏதேனும் விசேடமுண்டா.

மாடவ்யன் வ-ம்—ஒரு விசேடமுமில்லை ஆனுல் வரும் வழியில் இரண்டு கேசரிகளைப் பார்த்தேன், அவ்விரண்டும் பிரியாமனத்துடன் பிரிந்ததையும் பார்த்தேன்.

சத்தியவான் வ-ம்—பேஷ் கேலிசெய்யாதே வா போகலாம்.

(இருவரும் போகிருர்கள்)

சீன் 6 இடம்-காடு

பத்மாக்ஷி-வம்—நாதா நம்முடைய புத்திரன் வரவில்லையே, ஒரு வேளை வரும் வழியில் ஏதேனும் ஆபத்து நேரிட்டதோ.

சத்தியவான் வ-ம்—என்னயிது மாடவ்பா ஏதோ பரிதாபக்குரலாய் கேட்கின்றதே மேலும் என் தாய்தந்தையர் குரல்போலிருக்கின்றதே (சத்தியவான் திரும்பிப்பார்த்து) ஹா தந்தையே என்ன காரணம்.

(ஐயையோ தந்தையே என்ற வர்னமெட்டு)

ஆஹா ஹா உங்களை அவனியிலிவ்வித
ஆக்கினைகள் செய்த அரும்பாவியாரோ
அடியேனுக்கே உரைப்பீர்
அன்டமதில் அன்னவனை ஆக்கினை செய்திடுவேன்

(துயுமச்சேனன் தரு.)

புத்திரனே நீயில்லா வேளைதனைக் கண்டு
பாவி கஜகேது தாவியே வந்து
மேவியே எங்கள் கண்ணை
குத்தினனே புத்திரனே இத்ததி என் செய்குவோம்

(சத்தியவான் தரு)

உங்களை யிவ்விதம் செய்ததோர் பாவியை
பங்கஞ் செய்துவாரேன் சஞ்சலமின்றி
இங்கே யிருந்திடுவீர்
சங்கரனின் சாக்ஷியாக அங்கம் துளைத்துவாரேன்

(துயுமச்சேனன் தரு)

தனியாக நீ சென்று சண்டையிடவேண்டாம்
சந்தர்ப்பம்போல் சொன்னேன் தனயனே எங்கள்
தன்வார்த்தை மீறிடாதே
தயாபரன் துணையிருப்பார் சஞ்சலமேனோசொன்னேன்

சத்தியவான் வ-ம்—ஐயோ பிதா என்னகோரம் அச்சமயம் யான் யில்லாமற் போனேனே, பிதா இப்போதாகிலும் விடையீயுங்கள்.

துயுமச்சேனன் வ-ம்—மைந்தா ஏன் இவ்வித அவசரப்படுகின்றாய் வீணில் அவசரப்படாதே

சத்தியவான் வ-ம்—என்ன பிதா நம்மை யொருவன் இவ்வித பழி செய்ய முயன்றால் உடனே அவனை நம்முடைய வாளுக்கிரையிட வேண்டாமா பிதா தாங்கள் யாதொன்றுக்கும் அஞ்சாமல் விடையீயுங்கள்.

துயுமச்சேனன் வ-ம்—ஆயினும் மைந்தா எனக்கொருவரம் தர கோருகின்றேன்.

சத்தியவான் வ-ம்—என்ன வரம்வேண்டும் அவ்வாறேதருகிறேன்

துயுமச்சேனன் வ-ம்—மைந்தா அந்த சத்ராதி கஜகேதுவிடம் போர்புரிவதில்லையென்றும் எங்களைவிட்டு பிரிவதில்லையென்றும் இவ்விரண்டு வரம் தான்.

சத்தியவான் வ-ம்—என்ன யிவ்விதமாக தெரிவிக்கின்றீரே ஆயினும் இது நம் காலவித்யாசந் தான்.

துயுமச்சேனன் வ-ம்—மைந்தா பசியோ அதிகரிக்கின்றது நீ அடுத்த கானகம் சென்று எங்களின் பசியாரும்பொருட்டு கொஞ்சம் கனிவர்க்கங்கள் பரித்துவா.

(சத்தியவான் போகிறான்)

## சீன் 7 இடம்-அரண்மனை

(சாவித்திரி தரு)

(சொபுகப்சகயாலியா என்றமெட்டு)

நாதன் வராததாலே நான் வாடினேன் புவிமேலே
பாதகியா னிவ்வேளை பார்ப்பதெங்கு இக்காலே நா

என்னையவர் மறந்தாரோ யாரையாகிலும்மணந்தாரோ
கன்னிகை என்னெதிர்கேரே காதல்தீர்க்க வருவாரோ நா

மைபல் மீருதென்செய்வேன் மங்கையானெங்குவுய்வேன்
தையல் யான் எவலை வைய்வேன் தருணம் என்னுயிரைகொய்வேன் நா

உன்னைவிட்டு இனி தேரேன் உத்தமியாரையும் கோரேன்
அன்ன ஆகாரமதைப் பாரேன் ஐயா உங்கணைசமாரேன் நா

(சாவித்திரி மூர்ச்சையாகிறாள் சகிகள் உபசரிக்கின்றார்கள்)

சகிகள் வ-ம்—தேவி தங்களுக்கு என்ன சஞ்சலம் உண்டாகின அதை தாங்கள் எங்களிடம் தெரிவியுங்கள் தாயே.

சாவித்திரி வ-ம்—அடி எனக்கு யாதொரு வருத்தமுமில்லை நீங்கள் போங்களடி உங்களின் வேலையைப் பார்த்துக்கொண்டு

(மாலவி வருகிறாள்)

மாலவி விருத்தம்.

என்னரும் தவத்திலீன்ற எழில்மிகும் மகளே கேளாய்
இன்று உன் முகம் தளர்ந்து இருப்பதின் விபரம் தன்னை
நன்னயமுட னெனக்கு நயமுட னுரைப்பா யாளுல்
திண்ணமாய் இந்தவேளை திறமுடன் முடிப்பேன் பாராய்.

சாவித்திரி வ-ம்—தாயே என்மனதில் ஒன்றுமில்லை யான் எப்போதும் போலவேதா னிருக்கின்றேன்.

மாலவி வ-ம்—கண்மணி உண்மையைச் சொல் பயப்படாதே.

சாவித்திரி வ-ம்—அம்மணி என்மனதிலிருப்பதைப் புகலுதற்கு நாணமிஞ்சுகின்றது தாயே.

மாலவி வ-ம்—கண்மணி பெற்றதாயிடம் கூறுதற்கு நாணமுராமா வேண்டாம் என்றும் ஒளியாமற்சொல் பயப்படாதே.

சாவித்திரி தரு.

(லோகமான்யபால கங்காதரதிலகம் என்றமெட்டு)

பாட்டு.

எந்தனை யீன்றெடுத்த அன்னையே கேளும்
எய்குரான் பாவிமதன் பாணமே நாளும் எ

தொகையறு.

பாங்கியருடன் கூடி பூஞ்சோலை பார்த்துவர
பரிவுடன் யானும் சென்றேன்
பக்ஷமாய் எந்தனுக்குகந்ததோர் நாயகன்
பாவையான் கண்டேன் அன்றே

பாட்டு தொடர்

அன்னவர் மீது காதலாகினேன் தாயே
அம்மணி வேறொன்றுமில்லை யறிவாயே எ

தொகையறு.

கன்யராம் அன்னவரை கலியாணம் செய்திடில்
கன்னியான் பிழைப்பேனம்மா
காதலன் அன்னவரை காணாதிருந்திடில்
கருத்துடன் மடிவேனம்மா

பாட்டுத்தொடர்.

இதுதா னென்னதுரை யெடுத்துரைத்தேனே
இனியொன் றுமில்லை இயம்பினேன் யானே (எ)

சாவித்திரி வ-ம்—தாயே நான் நந்தவனத்தைச் சுற்றிப்பார்த்து வரும்பொருட்டு தோழிமார்களுடன் சென்றபோது அச்சமயம் என்னுடனிருந்த தோழிகள் எனது ஆடையெடுத்து வருவதற்காக அரண்மனைக்கேகிவிட்டார்கள் அவ்வேளை என்னை ஓர்கேசரி கொல்ல துரத்தி வந்தது அதுசமயம் யாரோ ஒரு இளவரசர் அச்சிங்கத்தைக் கொன்று என் பீட்டைத் தீர்த்தார் ஆதலால் அன்னவர்மீது அதிக ஆவலுற்றிருக்கின்றேனே தவிர வேறொன்றுமில்லை தாயே.

சகி வ-ம்—அம்மணி ராஜபூபதி வருகின்றனர்.

மாலவி வ-ம்—என் அருந்தவத்திலுதித்த ஆசைமகளே நீ சென்று சையாகிரகத்திலிரு நான் உனது பிதாவிடம் உன்னபிப்பிராயத்தை கூறி உந்தனின் எண்ணங்களை ஈடேற்றுகிறேன்.

(சாவித்திரி போகிருள் அஸ்வபதி வருகிருர்)

மாலவி-வம்—பிராணிபதி வந்தனம்

அஸ்வபதி வ-ம்—ப்ரிய சகி மலர்ந்த தாமரையை யொத்த உனது திருமுகமானது இன்று ஒருவித வாட்டத்துடனிருக்க காரணம் யாது.

மாலவி வ-ம்—நாதா எனக்கு ஒருவித வருத்தமும் கிடையாது ஆயினும் நமது அருந்தவப் புதல்வியாகிய சாவித்திரியின் கவலையே இரவும் பகலும் என் மனதை பாதித்துக்கொண்டிருக்கிறது.

அஸ்வபதி வ-ம்—கண்மணி ஆம் நமது புத்திரியின் கூர்மைபுத்திக்குகந்த கொழுநன் கிடைக்கவில்லையே அதற்கென்ன செய்வது ஆயினும் உலகத்தின்கண்ணுள்ள அரசகுமாரர்களின் திருவுருவப்படங்களை தருவித்து நம் புத்திரிக்கு இஷ்டமான வரனை மணம் சூட்டலாம்.

மாலவி வ-ம்—சகி நீ சையாகிரகத்திற்கு சென்று சாவித்திரியை நாங்களழைத்ததாக அழைத்துவா.

சகி வ-ம்—அம்மணி பிரம்மபுத்திரர் வருகிருர்.

நாரதர் தரு.

(காதவிந்துகளாதி என்றமெட்டு)

சத்து சித்தானந்த சாயி சிவா சிவா
சந்திரசேகர தேவா சிவா சிவா
புத்தினி பார்வதி லோலா சிவா சிவா—வரந்தரச்சய்

14893
சென்னை-600 008

கொன்றைச்சூடிய கோவே சிவா சிவா
கோபாலன் தனக்கு மைத்துன சிவா சிவா
மன்றுள்ளாடிய மகிபா சிவா சிவா—மகதேவா

புலித்தோலுடைய புண்யா சிவா சிவா
புரமூன்றெரித்த பூமானே சிவா சிவா
களிப்பா யென்னுள்ளம் கருணை சிவா சிவா—கதிரானே

பாசுபாணியெனும் பாதா சிவா சிவா
பக்தர் முத்தர்களை கார்த்தாய் சிவா சிவா
சிறுவன் தியாகன் கவிபுராய் சிவா சிவா—அருள்தந்து

(நாரதர் வருகிறார் அஸ்வபதி முதலியோர் வணங்குகிறார்கள்)

(பச்சைமாமலைபோல்மேனி என்றமெட்டு.)

சரணம் சரணம் சாமி சாஷ்டாங்கமாய் சரணம்
தருணம் நீரிங்குவந்த தாத்பரியம் தானுமென்ன
சிறுவர் எங்களின்மீது செம்மலே கிருபை வைத்து
வருகவும் யாங்கள் தன்யனாகவே யானோம் சுவாமி ச

நாரதர் தரு.

(ஷை வர்ணமெட்டு)

வாழ்வீர் வாழ்வீர் வாழ்வீர் வாழ்வீர் வையகமீது வாழ்வீர்
ஆழிசூழுலகில் நீங்கள் அரன்பதம் போற்றிவாழ்வீர்
ஏழுலகுண்டமாயன் இணையடி தன்னைநாளும்
ஏற்றியே மலர்சாற்றியே எதிரிகளை நீர் ஜெயித்து வா

நாரதர் வ-ம்—கல்யாண் வீற்றிருங்கள்.

அஸ்வபதி வ-ம்—சுவாமி தாங்கள் இது சமயம் இவ்வடியேனின் இல்லத்திற்கு எழுந்தருளியதால் யாங்கள் தன்யனானோம்.

நாரதர் வ-ம்—வெகு சந்தோஷம் ராஜன் உங்களின் முகம் வாடியிருக்கும் காரணம் யாது.

அஸ்வபதி வ-ம்—சுவாமி முனிபுங்கவரே எனது அருந்தவப் புதல்வியாகிய சாவித்திரிக்கு மணம் புரிவிக்க தக்கவரன் கிடைக்கவில்லையே யென்கிற சஞ்சலமே எங்களின் மனதை பாதித்து இருக்கும் சமயம் தாங்களும் வந்தீர் அதுவும் தவிர என்மகள் தங்களின் வரப்ரசாதத்தினால் பிறந்தவளல்லவா ஆதலால் தாங்களே தக்க மணவாளனைப் பார்த்து மணம் சூட்டவேணும் சுவாமி.

நாரதர் வ-ம்—நல்லது அரசனே உன் மகளின் மனநோக்கத்தை கண்டுக்கொண்டனையா.

அஸ்வபதி வ-ம்—சுவாமி அதின் பொருட்டுதான் அன்னவளை அழைத்துவர தாதியை அனுப்பியிருக்கிறேன்,

(சாவித்திரி வருகிறாள்)

சாவித்திரி விருத்தம்.

நான்முகன் மைந்தனான நாரதமுனியே போற்றி
மேன்மையாய் உலகமெல்லாம் மிக்கவே புகழாய் போற்றி
தன்மையாய் உனது பாதம் சாவித்திரியாளும் போற்றி
இன்று என்னெண்ணம் தன்னை ஈடேற்றும் போற்றி போற்றி

நாரதர் வ-ம்—தீர்க்க சுமங்கிலீபவா மங்களமுண்டாகுக

(சாவித்திரி தன் தாய் தந்தையர்களை பணிகிறாள்)

மாலவி வ-ம்—கண்மணி இவர் உன் கல்யாண காரியார்த்தமாய் உன் மன அபிப்பிராயத்தையறிய விரும்புகிறார் ஆகலால் நீ ஒரு தடங்கலுமின்றி நாணமுறாது இவரிடம் உன் மனதிலிருப்பதை உரைப்பாய்.

நாரதர் வ-ம்—என்னிடம் உரைப்பதற்கு நாணமுறுகிறாள்போல் தோன்றுகிறது ஆதலால் யான் ஒருபுறமாக மறைந்திருக்கின்றேன்,

அஸ்வபதி வ-ம்—முனிபுங்கவரே தாங்கள் செல்லவேண்டாம் இங்கனே வீற்றிருங்கள் (சாவித்திரியை நோக்கி) குழந்தாய் நீஇவ்வேளையில் வெட்கப்படுவது நன்கல்ல உன் மன அபிப்பிராயத்தை நமது குருவிடம் உரைத்துவிடு.

நாரதர் தரு.

(அடைக்கலமே என்ற வர்னமெட்டு)

போய் வருவேன் போய் வருவேன்
புண்ணியசிகாமணியே நன்னயமுடனே யான் போய்
வாய்திறந்து உரைக்க வெட்கப்படுகிறாள்
வண்மையுடன் யாரையோ விரைந்து வருகிறாள்
பேய்பிடித்தவள்போல பிதற்றி திரிகிறாள்
பிணக்கமுடனிவளின் மனதை ஒளிக்கிறாள் போய்

நாரதர் வ-ம்—அரசன் யான் இவ்வித சந்தர்ப்பத்தில் அறியாமல் வந்துவிட்டேன் அதுவுமன்றி உற்று நினைக்கின் யாரோ ஒரு அரசகுமாரனை நினைந்து உருகிறாள்போல் தோன்றுகிறது ஆதலின் யான் சென்று வருகிறேன்,

அஸ்வபதி வ-ம்—சுவாமி அடியார்கள் மீது இவ்வளவு கோபமா குமா (சாவித்திரியை நோக்கி) குழந்தாய் நமது குருவாகிய மாமுனிவர் கோபித்துச்செல்கிறார் ஆதலால் இனிமேலாவது நாணமுறாது உன் மனவிருப்பத்தை யுரைப்பாய்.

சாவித்திரி தரு

(எப்படிதான் தாய்வயிற்றில் என்றமெட்டு)

பல்லவி

உத்தம மகாமுனியே உந்தனடியாள்யானும்
உரைப்பதை கேட்டுவருவீர் உ

அநுபல்லவி.

சித்தமது களித்து சென்றேன் பூங்காவனத்தில்
சேடியரில்லா சமயம் சிங்கம் துரத்தியதே உ

சரணம்.

சத்தியவந்தரவர் தருணமதனைக்கொன்று
சேபிழை எனைத்தானே
சந்தோஷமுடனன்று அந்தமுட னவர்மேல்
சகியாத காதலானேன்
பக்தியுடனவரை பரிவாய் விவாகம் செய்ய
இத்தகி யென்மனதில் இச்சையுற்றேனே சுவாமி உ

சாவித்திரி வ-ம்—சுவாமி உனதடியாளாகிய யான் சில்நாளைக்கு முன் சேடியருடன் சிங்காரவனத்திற் கேகுகையில் என்னை ஒரு சிங்கம் துரத்திவர அச்சமயம் சாலவபுரிக்கரசனின் மைந்தராகிய சத்தியவந்தர் திடீரென ஓடிவந்து அம்மதத்தகேசரியை கொன்று என்னைக் காத்து ரக்ஷித்தார் அதனால் அவர்மீது காதலுற்றேன் அதற்கு முன்பே அவரை விவாகம் புரிய ஆசைவைத்திருந்தேன் அதே பிரகாரம் தங்களினருளினால் நிறைவேறினது.

நாரதர் வ-ம்—சத்தியவானையா?

சாவித்திரி வ-ம்—ஆம் சுவாமி

நாரதர் வ-ம்—ஹா ஜோதிமயமே என்ன கஷ்டம் பார்த்தனையா தவிரவும் இதின் ரகசியங்களை தெரிவிக்காவிடின் நம் சிரசு வெடித்துப் போய்விடுமே யென்ன செய்யலாம்.

அஸ்வபதி வ-ம்—சுவாமி முனிவரே என்ன ஆலோசிக்கின்றீரோ காரணம் யாது.

நாரதர் வ-ம்—அரசரூபா உன்புத்திரிகோரிய புருடன் மிகவும் நல்லவன்தான் ஆனால் அவனின் தாய்தந்தையர் அரசுசெலுத்தியநாட்டை வேற்றரசனின் வசம் விடுத்து அவனால் கண்களையிழந்து கானகத்தில் அளவிலாகஷ்டதிசையில் இருக்கின்றனர் அந்தசத்தியவானோ புத்தியிலும், சௌரியத்திலும், சத்தியத்திலும் மிகவும் மேன்மை பூண்டவன்தான் ஆனால் அவன் ஆயுள் இன்னும் ஒரே வருடத்தில் முடிவு அதைப்பற்றிதான் ஆலோசித்தேன்.

சாவித்திரி வ-ம்—ஹா பரசுபாணியே இதுவும் என் பாக்கியம் தானே.

அஸ்வபதி வ-ம்—குழந்தாய் சாவித்திரி இனியேனும் இவ்வெண்ணத்தை விட்டுவிடு.

சாவித்திரி வ-ம்—பிதா யாருக்கும் பிரம்மன் எழுதியபடியொழிய வேறுவிதமாக நடக்குமா தாங்கள் எல்லாமறிந்த அரசராயிருந்தும் இம்மொழி தாங்களறிந்ததில்லையா ஆதலால் அவரின் ஆயுள அற்பமாயிருந்தாலும் அவரையே மணம்புரிவேனே யொழிய வேறு யாரையும் கனவிலும் கருதேன் இது நிச்சயம்.

அஸ்வபதி வ-ம்—குழந்தாய்

அஸ்வபதி தரு.

(மார்க்கத்தில் கண்டகனி என்றமெட்டு)

தெரிந்திருந்தும் அற்ப ஆயுளதை பூண்ட
நாதனைக் கோரலாமா

(சா) இறந்தாலும் வேறொருநாதனை மணர்ந்து
விரும்பியே சேரலாமா

(அஸ்) கன்னிபருவத்தில் கடும்சிறைபில்நீயும்
கலங்கவும் காரணமேன

(சாவி) என்ன சொன்னாலும் நீர் மங்கையாள் யானுமே
நன்னயமாய் கேளேன்

(மாலவி) என் சொல்லை மீராதே அன்னமே குழந்தாய்
இன்பமாய் இப்பொழுது

(சாவி) அன்று எழுதிய அயனின் எழுத்தது
அன்னையே தபபிடாது

(மாலவி) எத்திசையும் புகழ்பெற்றிடும் மன்னனைப்
யான் மணம் செய்துவைப்பேன்

(சாவி) சத்தியவானைத் தவிர வொருவரை
தாயே மனா ஒப்பேன்

சாவித்திரி வ-ம்—தாயே அன்று எழுதிய அயனின் கட்டளை நம்மைவிட்டு அகலுமா அப்படியிருக்க எப்போது ஒருவரை புருடரென மதித்தேனோ அவர் தீர்க்க ஆயுளாயிருந்தாலும், அல்லது அற்ப ஆயுளாயிருந்தாலும் அது யான் செய்த பாக்கியமே அதுவும் தவிர முன்னொருநாள் நந்தவனத்தில் அவரை மணந்துமாகிவிட்டது ஆதலால் இனி ஒருவரை கனவிலும் கருதேன் இதுவே சத்தியம் சத்தியம்.

நாரதர் வ-ம்—சாவித்திரி தேவி உலகில் அவனைவிட எவ்வளவோ அழகு வாய்ந்த மன்னவர்களில்லையா நீ ஏன் அவனையே காதலிக்கின்றாய் வேண்டாம் என் வார்த்தையை மறுக்காதே.

சாவித்திரி வ-ம்—முனிநாதா தாங்களே இவ்விதமுரைத்தால் எப்படி, இப்போது தாங்கள் திருவாக்கினால் தீர்க்கசுமங்கலீபவா என உரைத்தீரோ அச்சொல் பிசகுமா அதுவும் தவிர என்னை ஆதரிப்பது தங்கள் கடமையல்லவா ஆதலால் இவ்வடியாளுக்கு நல்வரம் கொடுத்து செல்லவேண்டிய கடமை தங்களுடையதே.

நாரதர் வ-ம்—(தனி) ஆஹா நம் வார்த்தையாலேயே நாம் மோசம் போனோமே (சாவித்திரியை அருகிலழைத்து உபதேசிக்கிறார்) அம்மா சாவித்திரி உன் கணவன் உயிர்பிரியும் சமயம் இம்மந்திரத்தை புகலுவாயேல் உன் கஷ்டம் நிவர்த்திக்கும் அஸ்வபதி உன் மகள் கோரிய மன்னனுக்கே யாதொரு அட்டியின்றி மணம் புரிவிப்பாய் அதற்கு யானும் தக்கமுயற்சி செய்கிறேன் அஞ்சாதே.

(நாரதர் செல்கிறார் எல்லோரும் செல்கிறார்கள்.

## சீன் நெ. 8. இடம்-காடு.

(துயுமச்சேனனும் பத்மாக்ஷியும் காட்டில் கஷ்டப்படுகிறார்கள் அஸ்வபதி முதலானோர் வருகிறார்கள் சாவித்திரிக்கும் சத்தியவானுக்கும் விவாகம் நடைபெறுகிறது.)

## சீன் 9. வைவசுதபட்டணம் எமலோகம்.

எமன் விருத்தம்.

புரமூன்றை யெரித்த ஈசன் புனிதனின் அருளினாலே
உரித்தமாய் இந்தலோகம் உண்மையாய் நீதியோடும்
நரர்களுக் கேற்றவாறு நாள்தோறும் கணக்கைப்பார்த்து
பொருத்தமாய் தண்டனைகள் புகன்றிடும் தருமன்யானே.



எமன் விருத்தம்.

மண்ணாகி விண்ணாகி மலையுமாகி
வைரமும் மாணிக்கம் தானேயாகி
கண்ணாகி கண்ணுக்கோர் மணியுமாகி
கலையாகி கலைஞானம் தானேயாகில்
பெண்ணாகி பெண்ணுக்கோர் ஆணுமாகி
பிரளயத்துக் கப்பாலே கண்டமாகி
எண்ணாகி எண்ணுக்கோர் எழுத்துமாகி
எழுஞ்சுடரா யெம்மடிக ளியன்றவாரே.

எமன் வ-ம்—நான் அனுதினமும் நான்முகனால் உண்டாக்கப்பட்ட ஒன்றேகால் லக்ஷம் பிராணிகள் அதுவே அல்லது வேறே ஒன்றேகால்லக்ஷம் பிராணிகளை நான் கவர்ந்து அவரவர் பாவபுண்ணியங்களுக்கு தக்கபடி, கஷ்டசுகங்களை நரக சுவர்க்கமூலமாக கொடுத்து வருகிறேன் சம்ஸார கர்த்தனாகிய சிவபெருமான் எனக்கிட்ட கட்டளைப்படி, ரௌரவாயவகம், பூவலயம், முள்ளுப்பீப்பாய், சக்கரம் அட்டைக்குழி, அரணைக்குழி, புழுக்குழி, அக்கினிகுண்டம், பழுக்கக்காய்ச்சியவிருப்புஸ்தம்பம், தேரை, பூரான், செய்யான், பாம்பு, முதலிய விஷ ஜந்துக்கள் கூடிய திமிரபடலஸ்தானங்களையும், கும்பிபாகம்,முத

மான நரகங்களேயும், கதை, சூலம், பாசம், பிண்டி, கண்டகோடாலி, முதலான ஆயுதங்களேயும், பன்றி, சிங்கம், நாய் முகங்களேயுடைய, கிங்கிலியர்களேயும் 4448-வியாதிகளேயும் சகாயமாகக்கொண்டு என் ராஜ்ய பாரத்தை மிகு நீதியோடு பரிபாலநார்த்தம் செய்து வருகிறேன், நான் சற்றுவது நீதிதவறி நடப்பனேயாயின் நான் அமரும்படியான சிம்மாசனத்திற்கு மேலே என் சிரசுக்கு நேராக மயிர்காம்பினாலே கட்டி தொங்கிக்கொண்டிருக்கும் பர்வதமருந்து சிரசின்மேல் விழுந்து, என் சிம்மாசனத்திற்கு கீழாக சத்தசாயமாய் சுவாலைவீசி ஓடிக்கொண்டிருக்கும் அக்கினியாற்றில் நான் விழுந்து அமிழ்ந்திடுவேனென்பதற்கு யாதொரு ஆக்ஷேபணையில்லை இன்று என்னால் நடத்தக்கூடிய சட்டதிட்டங்களே யான் விசாரித்து கவனிக்கிறேன் அடே கிங்கிலியர்காள்.

(ஆருக்குமஞ்சாத என்றமெட்டு).

எந்தன் மனதுக்கு ஏற்ற தூதர்களே
வாராய்—வாராய்—வாராய்

அந்தமுடன் ஆருக்குமஞ்சாது
ஆக்கினை செய்திடும் அன்புள்ள தூத
ருஷார்—உஷார்—உஷார்

எமன் வ-ம்—அடே செந்தலைபூதா, செங்கண்ணு, விகடநேத்ரா, துரைமுகா, சண்டமார்க்கா, ஆயுள்பிரமாணங்களை அறிந்துரைக்கும் கர்ணிகன் எங்கே அதிசீக்கிரம் அழைத்து வாருங்கள்.

(சித்ராபுத்ரன் வருகிறான்)

சித்ராபுத்ரன் வ-ம்—தென்திசைக்கோனே வந்தனம்.

எமன் தரு.

எண்டிசையிலுமுள்ள ஏக உயிர் முடிவை
கண்டுதினமுரைக்கும் கணமுள்ள சித்ராபுத்ரா
அன்புடன் இன்றுகொண்டு வந்ததோர் பாவிகளை
இன்பமாய் எந்தனிட எதிரினில் நிற்கச்செய்வாய்

எமன் வ-ம்—ஏ கர்ணிகா இன்று நமது ஆக்ஞைக்குட்பட்ட சண்டாளர்களை கொண்டுவந்து நிறுத்தி அவரவர் செய்த பாவபுண்ணிய செயல்களை உன் கணக்கின்படி புகல்வாய்.

சித்ராபுத்ரன் வ-ம்—பிரபு தங்களின் உத்திரவின்படியே இதோ கொண்டுவரச் செய்கிறேன்.

(தூதர்கள் சண்டாளர்களே இழுத்துவருகிறார்கள்.)

சித்ராபுத்ரன் வ ம்—அரசே இந்த சண்டாளன்,

சித்ராபுத்ரன் தரு.

கன்றுகுட்டியதனை வஞ்சித்து பால்கரந்த
கடுமையான துரோகி கபடனிவனைப்பாரீர்

எமன் தரு.

பசுவதை வஞ்சித்து பால்தனை கரந்த
பாவிதனை ஈட்டி யாலே குத்தி
பாம்புத் தேரைச் செய்யான் பற்பல ஜெந்துக்கள்
பற்றிகடித்திட செய்வீர் மொத்தி

(தூதர்கள் சண்டாளனை தள்ளிச் செல்கிறார்கள்)

சித்ராபுத்ரன் வ-ம்—அரசே இவனைப் பார்த்தீர்களா?

சித்ராபுத்ரன் தரு.

நயவஞ்சகமாய் பேசும் நலமில்லா பாவியிவன்
நாளும் கலகம் செய்யும் நாட்டுக்காகாத துரோகி

சித்ராபுத்ரன் வ-ம்—அரசே இவன் ஒரு குடும்பத்தை ஒன்பது குடும்பமாக்கி அலையச்செய்யும் துரோகி இவன்பெயர்தான் கையாட்டி கந்தசாமியென்னும் தலையாட்டி சமரபுரி.

எமன் தரு.

குரூரகுணமுள்ள பாவி யிவன் தனை கோடாலியால் உடலைப்பிளந்து
உருவம் தெரியாமல் யாளி கூலிகளுக்கிரையாகவே கொடுப்பீர் சிறந்து

(தூதர் பாவியை தள்ளிச்செல்கிறார்கள்(

சித்ராபுத்ரன் வ-ம்—பிரபு இந்த சண்டாளனைப் பார்த்தீரா?

சித்ராபுத்ரன் தரு.

கல்விதனைக் கற்பித்த குருவுக்கு துரோகமே
கனமுடன் செய்தோன் பாரீர்
தொல்லுலகில் வேறோர் வாத்தியாருடன் சேர்ந்த
துஷ்டனிவன் பாரீர்

எமன் தரு.

குருத்துரோகம் செய்த கொடியபாவிதனை
கூறுசிதன்றாலே கண்ணைக்குத்தி
மிருகங்களுக்கிரையாக யிவனையே
மேட்டிமையாக கொடுப்பீர் மொத்தி

(தூதர் சண்டாளனை தள்ளிச்செல்கிறார் புண்ணியவான் வருகிறார்)

புண்ணியவான் தரு

(கோருங்கள் கோருங்கள் என்றமெட்டு)

பல்லவி.

பாடுங்கள் பாடுங்கள் பாடுங்களே—பக்தி
தேடுங்கள் தேடுங்கள் தேடுங்களே (பா)

அநுபல்லவி

பாலகன் துருவன் தன்னை பாது காத்த மாதவனை (பா)

சரணங்கள்

காடிலாடு மாடு மேய்த்திட்ட கண்ணன்
காதகன் கம்சனை மாய்த்திட்ட வண்ணன்
வாடிய யானையை காத்திட்ட புண்யன்
வள்ளலெனும்-சொல்லரிய-கள்ளதிரு-மாலின்மீது (பா)

ஆதியிலே பூமி தேவியின் பாரம்
ஆகற்றுவதாகவே மாலுமன்னேரம்
நீதியா யுலகில் பத்தவதாரம்
நிந்தனை—புரிந்தவரை—அந்தமுடன்—கொன்றவன்மேல் (பா)

மன்னவன் மாபலி மாவீர ராவணன்
மம்மதைபூண்ட தாடகை யிரணியன்
இன்னுமனேக துஷ்டர்களைக் கொன்றவன்
இப்புவியில்-ஒப்பிலாத-செட்பரிய-வப்பனைநீர் (பா)

சென்னை நகர்தனில் வாழ்ந்திடும் சிங்கம்
சிறுவன் தியாகரூஜன் சொல்கவி பொங்கும்
நன்னயமாய் பெயர் இவ்வுலகெங்கும்
நாடிடவே-கூடிதினம்-சேடன்மீ-தமர்ந்தவனை (பா)

சித்ராபுத்ரன் வ-ம்—அரசே இவரைப் பார்த்தீரா இவர் மகா புண்யவான் சந்ததமும் விஷ்ணுவின் பக்தர் அதுவுமன்றி தினமும் தானதருமம் நிறைந்தவர்.

எமன் வ-ம்—ஏ! சித்ராபுத்ரா இப் புண்யசீலரை அழைத்துப் போய் புஷ்ப விமானத்தி லேற்றி வைகுந்தத்திற்கு அனுப்புங்கள்.

(புண்யவான் போகிறார்)

எமன் வ-ம்—ஏ கர்ணிகா நமது ஆக்ஞைக்குட்பட்ட சண்டாளர் கள் இன்னும் யாராவது இருக்கின்றனரா?

சித்ராபுத்ரன் வ-ம்—பிரபு இன்னுமொருவரு மில்லை (கணக்கை பார்த்து) சுவாமி சாலவபுரிக்கு இளவரசனான சத்தியவான் என்பவன் இன்னும் 15-நாழிகைக்குள் நம்முடைய நகருக்கு வரவேண்டியவன்.

எமன் வ-ம்—சித்ரபுத்ரா நன்காராய்ந்தனையா சரி, அடே

எமன் தரு.

(செந்தலை பூதா வாடா என்ற மெட்டு)

சண்டனே யான் சீராய் சாற்றுவதைக் கேளாய்
சத்தியவானுயிர் ஜல்தியில்கொண்டு நீ சந்தோஷமுடன்வாராய்

எமன் வ-ம்—அடே சண்டமார்க்கா, குருதிக்கண்ணா, நீங்கள் கீழுலகம் சென்று அந்த சத்தியவானின் உயிரை கவர்ந்து வாருங்கள்.

(தூதர்கள் தரு ஷை மெட்டு)

அப்படியே போரோம் அரசே உன்சொல் மாரோம்
இப்புவி கலங்கிட சத்தியவானுயிர் இழுத்துகொண்டுவாரோம்

(தூதர்கள் செலகிறார்கள் நாரதர் வருகின்றார்)

சித்ராபுத்ரன் வ-ம்—பிரபு பிரம்ம புத்ரர் வருகின்றார்

எமன் வ-ம்—ஏன் வருகின்றாரோ சரி வரட்டும்.

நாரதர் வ-ம்—எமதர்மா மங்களமுண்டாகுக நீ க்ஷேமந்தானா?

எமன் வ-ம்—முனி நாதா சாக்ஷாத் ஜெகதீசனின் கிருபையினா லும் தங்களின் ஆசீர்வாதத்தினாலும் யான் க்ஷேமமே ஆயினும் தாங் கள் இவ்வளவு சிரமத்துடன் இங்கு வந்த காரணம் யாதோ

நாரதர் வ-ம்—தென்திசைக் கதிபா நான் என்னவென புகலு வேன் ஐயோ பாவம் நான் வரும் வழியில் பூலோகத்தில் சாலவபுரிக் கரசனான த்யுமச்சேனனும் அவனின் தேவியும் சத்துருவின் சூதினால் கண்ணற்று தன் புத்திரன் சத்தியவானுடன் கானகத்தில் அவஸ்தை யுற்றிருக்கின்றார்கள் அச் சத்தியவானுக்கு சாவித்திரி யென்னு மனைவி இருக்கின்றாள் அப்பெண்மணி தன் கணவனின் உயிர்முடிவை எப்படி யோ தெரிந்துக்கொண்டு அவனை விட்டகலாமலே அருகினில் வருந்திக் கொண்டிருந்த வண்ணமாகவே இருக்கின்றாள் அதைபற்றி தங்களி டம் மனு கேட்க வந்தேனே யொழிய வேறில்லை.

எமன் வ-ம்—அதற்கு நாம் வருந்துவதில் பயனென்ன அவனு க்கு அற்ப ஆயுள் அந்த அயனல்லவோ எழுதினார் அதற்கு யான் என்ன செய்யமுடியும். ஈசனின் கட்டளையை மீர முடியுமா தாங்கள் தயவு செய்து இது விஷயததில் சிரமம் எடுத்துக்கொள்ளாதீர்.

நாரதர் வ-ம்—எமதர்மராஜா நீரே இவ்விதம் புகன்றால் எப்படி

எமன் வ-ம்—நாரதரே யானென்ன செய்யமுடியும் உமக்கு எல்லாம் தெரிந்திருந்தும் என்னை நிஷ்டூரப்படுத்துவதில் யாதுபயன்

நாரதர் வ-ம்—தென்திசைப்பூபா எவ்விதமேனும் தாங்கள்தான் இதைப்பற்றி சிரமம் எடுத்துக்கொள்ளவேண்டும்.

எமன் வ-ம்—நாரதரே இவ்விதமெல்லாம் என்னிடம் புகலாதீர்.

நாரதர் வ-ம்—எமதர்மா உமக்கு எக்காலத்தும் இவ்வித கோபம் ஆகாது அதனால்தானே முன்பொருக்கால் நான் எவ்வளவு உரைத்தும் என் வார்த்தையை மறுத்து மார்க்கண்டனை பிடிக்கச்சென்று ஈசனிடம் உதையுண்டீர் அதேமாதிரி இதற்கும் ஏதேனும் ஒரு சூக்ஷி இருக்கலாம் ஆதலால் கொஞ்சம் யோசித்து சொல்.

எமன் தரு.

(ஏனோ சந்தேக மினியே என்ற மெட்டில் பிரட்டு.)

பல்லவி

போ போ போ நாரதரே
போதும் போதும் என்னை திரில் வாதுசெய்வ தேனின்னேரம் (போ)

அநுபல்லவி

புண்யன் சத்யவானென்று புகலுகின்றீரே நீரும்
என்முன்னே நின்றிடாதீர் எழுந்திருந்து அப்புரம் (போ)

சரணங்கள்.

ஆயுள் முடிந்தவனை அரைக்ஷணந்தன்னில் கட்டி
அழைத்துவர யெனக்கு
அரனிட்ட கட்டளை அறிந்திடு மித்ததி (போ)
உத்தமரே உனக்கு உகந்தவனாகிலவன்
உயிரை விடவும் போமா
உரைப்பா யெனக்கே சிறப்பாய் இதைவிட்டு (போ)

எமன் வ-ம்—நாரதரே நான் ஒருக்காலும் நீதி தவறி நடக்கேன் அவ்விதம்நடந்திடில் எனக்கும் ஈசனிட்ட ஆக்கினைகள் அனேகமுண்டு ஆதலால் இம் மொழியைத் தவிர்த்து வேறு மொழிப் புகலும் இல்லையேல் இதைவிட்டு எழுந்திருந்து நடவுங்கள்.

நாரதர் வ-ம்—எமரலி அந்த சத்தியவானின் உயிரை யான் உன்னிடமிருந்து கைபற்றாமல் போனால் என் பேர் நாரதனல்ல.

(நாரதர் போகிறார் தூதர்கள் வருகிறார்கள்.)

எமன் வ-ம்—அடே கிங்கிலியர்காள் சத்தியவானி னுயிரை கொண்டுவந்தீர்களா

தூதர் வ-ம்—பிரபு அச்சத்தியவானின் பத்தினியாகிய சாவித்திரி தேவியின் கற்பு நிலைமையின் அக்கினி எங்களை நெருங்கவொட்டாது தூரத்துகின்றதே நாங்கள் எவ்வளவோ முயற்சித்தும் முடியாமல் தப்பி வந்ததே தாய் வயிற்றிலிருந்து அவதரித்ததைப் போலாயிற்று.

எமன் தரு.

ஓடிப்போடா தடியா—நீங்கள்—உரைப்பதுவும் விடையா
வாது செய்தவனிட உயிர்தனை இத்ததி வாங்கிவருவேன் தடையா (ஓ)

எமன் வ-ம்—அடே மடையர்களே நான் சென்று அவன் உயிரைக் கொண்டு வருகிறேன் பாருங்கள் அடே என்கிடா வாகனத்தை கொண்டு வாருங்கள்.

தூதர் வ-ம்—பிரபு உம்முடைய கிடாவாகனம் மண்டியிட்டு பின் வாங்குகின்றது.

எமன் வ-ம்—சட் துஷ்டர்களே எங்கே பாசக்கயிறு

தூதர் வ-ம்—அங்கனே போட்டு ஓடிவந்தோம் சுவாமி.

(எமன் போகிறான்)

## சீன் 9 இடம் சத்தியலோகம்

நாரதர் வ-ம்—பிதா நமஸ்கரிக்கின்றேன்.

பிரம்மன் வ-ம்—நாரதா மங்களமுண்டாகுக என்ன விசேடம்.

நாரதர் வ-ம்—பிதா விசேடமொன்றுமில்லை நான் பூலோகத்திலிருந்து வரும்பொழுது அங்கே சாலவபுரிக்கரசனாகிய துயுமத்சேனனும் அவன் பத்தினியும் சத்துருவால் கண்ணிழந்து அவர்களின் புத்திரன் சத்தியவானுடன் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அச் சிறுவனுக்கு மஹா கற்புடைய சாவித்திரி யென்னும் பெண்பாலை மணம் சூட்டியிருக்கின்றார்கள் அப்பெண்மணி தன் கணவனின் உயிர் இன்றோடு பிரிவதை எவ்விதமோ தெரிந்துக்கொண்டு அதிக விசனப்படுகின்றாள். அதை தங்களிடம் அறிக்கையிட வந்தேன்.

பிரம்மன் வ-ம்—அதற்கு நாமென்ன செய்யக்கூடும் யான் அவரவருக்கு அன்றெழுதியபடிதான் நடக்கும் அதை மாற்ற முடியுமா முடியாதே ஆதலால் நீ இக்கஷ்டத்தில் தலையிடாது உன் இருப்பிடம் போவாய்.

நாரதர் வ-ம்—பிதா தாங்களே இவ்விதம் புகன்றாலெப்படி தாங்கள் மனது வைத்தால் கட்டாயமாக இக் காரியம் நிறைவேறக்கூடும். அதுவும் தவிர அப்பெண்பால் என் வரத்தினால் அவதரித்தவள் ஆதலால் பிதா அவளை காப்பாற்றவேண்டியது தங்களின் கடமையே.

பிரம்மன் வ-ம்—மைந்தா என்னசெய்வது ஆதியில் அவன் அவதரித்தபொழுதே அற்ப ஆயுளை நிர்ணயித்து விட்டேனே இனிமீதுஎன்னல் என்ன முடியப்போகின்றது ஒருவேளை எமதர்மனல் நடந்தாலும் நடக்கலாம் அவன் நீதிதவராதவன் அவன் மனதை லேசில் திருப்ப முடியாது. (சற்று யோசித்து) ஹே கருணா! நீ பூலோகத்தின்கண் சென்று எமன் சத்தியவானின் உயிரைப் பற்றிவருவான் அச்சமயம் நீ அவனுள்ளத்தில்புகுந்து அவனுக்கு கருணைவரச்செய்து அந்த சத்தியவானின் உயிரை விடுவித்து சீக்கிரம் வருவாய்.

## சீன் நெ 10. இடம்-காடு.

சாவித்திரி-தனி வ-ம்—நமது பிராணகாதலருக்கு இன்று ஆயுள் முடிவென்று நாரதமுனிவர் உரைத்துள்ளாரல்லவா அவரது உத்தாரப்படியே கடைசியில் மூன்று தினமும் கௌரீ பூஜையை அனுஷ்டித்தேன் நாம் இன்றையதினம் நம்முடைய நாயகரின் கூடவே இணைவிடாது இருக்கவேண்டும்.

சத்தியவான் வ-ம்—கண்மணி உன்னையான் விவாகம்செய்த இது நாளன்றி இன்று உன்முகம் தளர்ந்திருக்கும் காரணம் யாது?

சாவித்திரி வ-ம்—நாதா தாங்களிருக்கும்வரையில் எனக்கென்ன வருத்தமேற்படப் போகிறது ஆயினும் தங்களை ஒருவரம் கேட்க விருப்பமுற்றிருக்கின்றேன்.

சத்தியவான் வ-ம்—என்னவரம் கேள் கண்மணி அட்டியின்றி தருகின்றேன்.

சாவித்திரி வ-ம்—நாதா இன்று முழுமையும் உனதடியாளாகிய யான் உனைப்பிரியாதிருக்க வரமீயும்படி கோருகிறேன்.

சத்தியவான் வ-ம்—கண்மணி நீ கோரியபடியே வரமளித்தேன் இனிமீதாகினும் சந்தோஷமுடனிரு ஆயினும் எனையீன்ற தாய்தந்தையரின் பசியை தீர்க்கும்பொருட்டு,

(சென்று கனிபறித்து வென்றமெட்டு.)

(சத்தி) மானே கனிபரித்து யானே
மகிழ்வாக இங்குவருவேனே
மங்கையே இவரருகில் தானே
மாக்ஷிமையா யிரும் தேனே

(சாவித்) உனை பிரிந்திருக்கேன் உத்தமநாதா
மனையாள் யானும் வருவேன் போதா

(சத்திய) தந்தைதாய் வெகு துயரம்
தான்கொள்வாரிது நேரம்

(சாவித்) மணமதுமுடித்த மன்னனைப்பிரிய
மாதுமனமும் வாதுபுரியுதே
(சத்திய) சிங்கம் யானையுடன் யாளி
தீண்டாது துணையிருப்பாய் மேவி
(சாவித்) ஏதுரைத்தாலும் என்மனம் தேறேன்
எனையும் அழைத்து இத்ததி செல்வீர்

சத்தியவான் வ-ம்—காதலி வேண்டாம் அது துஷ்டமிருகங்கள் உலாவும் கானகம் அதைக்கண்டால் நீ பயப்படுவாய் ஆதலால் நீ இங்கனமேயிரு யான்சென்று வந்துவிடுகிறேன்.

சாவித்திரி வ-ம்—பிராணபதி நீ என்ன சொன்னபோதிலும் யான் கேளேன் தாங்கள் என்மீது தயவுகூர்ந்து என்மாமன் மாமியின் உத்திரவுபெற்று அழைத்துச் செல்லுங்கள்.

சத்தியவான் வ-ம்—பிதா சாவித்திரி கானகத்தை சுற்றிப்பார்க்க என்னுடன் வருவதாக புகல்கிறாள் தாங்கள் உத்திரவளித்தால் அழைத்துச் செல்கிறேன்.

த்யுமத்சேனன் வ-ம்—அருந்தவப்புத்ரா சாவித்திரியின் அபீஷ்டத்தைத் தடுக்காதே அம்மாதின் மனவிருப்பத்தின்படியே அழைத்துச்சென்று ஜல்தியில் திரும்பிவா.

(சாவித்திரியும் சத்தியவானும் போகிறார்கள்)

## ஸீன் - 11. இடம்-காடு.

சத்தியவான் வ-ம்—பிரியசகி கானகத்தின்சுகம் எவ்வாறு இருக்கின்றது பார்த்தனையா.

சாவித்திரி வ-ம்—பிராணேசா ஈசனின் அடியார்கள் தவம்புரியும் இக்காட்டிற்கு யான் வந்ததால் எனக்கு என்ன கஷ்டம் ஏற்படப்போகின்றதுநாதா.

சத்தியவான் வ-ம்—ஆயினும் கண்மணி நீ இங்கனேயிரு அதோ அந்த உலர்ந்த மரத்தின்மீது ஏறி கொஞ்சம் விறகுகளை வெட்டிக்கொண்டு வருகிறேன்.

சாவித்திரி வ-ம்—நாயகா அதிகதூரம் செல்லவேண்டாம்.

சாவித்திரி வ-ம்—(தனி) இனிமீதுதான் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் நாரதமுனிவர் சொன்ன நாழிகை நெருங்கிவிட்டது.

(எமபடாள் தெரிசனம் ஆகிறார்கள், சத்தியவான் ஓடிவருகிறான்.)

சத்தியவான் வ-ம்—ஹா! கண்மணி என்னெதிரில் ஏதோ கோரரூபங்களுடன் இருவர் வருகின்றார்களே ஐயோ என்னிடம் தான் வருகின்றார்கள்போலிருக்கின்றதே. (சற்றுதேகம் பொருத்து)

(கழுத்தில் விழுந்தமாலை என்றமெட்டு.)

என்னைபிடித்துகட்ட இருவர்வருகின்றாரே
ஏதுயன் செய்குவேன் மடமயிலே
எமன் உருவம்போல என்முன்னேதோற்றுகுதே
எப்படியான் பிழைப்பேன் இளங்குயிலே
இருவர்களிலே ஒருவர் என்னெதிரிலே
காமதிலே சூலமேந்தி வாரார் நேரிலே
எந்தனுக்குப்பின் உனையே—இனி
எவர்வைத்து ரக்ஷிப்பாரோ யானறியேனே (எ)

சாவித்திரி வ-ம்—நாதா என்ன, இவ்வடியாளை பயமுறுத்துகின்றீரே ஒருவரையுங் காணோமே, (இப்புரம் திரும்பி) ஐயோ ஜெகதீசா, என்னசெய்வேன் என் ஆளனைப்பிரிய நேரிடும்போ லிருக்கின்றதே.

சத்தியவான் வ-ம்—ஹா! கண்மணி என்னசெய்வேன்.

(ஐயோ மகனே நீ என்ற மெட்டு.)

நெஞ்சை வலிக்குது நாவைவரட்டுது
நினைவுதடுமாருதே உயிர்மீருதே கால்கைசோருதே
நாடுதே உயிர் ஓடுதே—ஓ—ஓ (நெ)

அதியாபிராயத்தில் அரும்பாலி யானுமே
அருஞ்சிறை வைத்தேனே எந்தன்மானே நீ தானே
ஐயையோ என்ன செய்வையோ—செ—செ (நெ)

என்தந்தை தாய்க்குமே யானிறந்தசேதி
எடுத்துரைப்பார் காணேன் ஒன்றும் தோணேன் பிணமானேன்
ஏகுதே உயிர் போகுதே—போ—போ (நெ)

(சத்தியவான் மரணமடைகிறான் சாவித்திரி புலம்புகிறாள்)

சாவித்திரி வ-ம்—ஐயோ! பிராணகாதலா இச்சண்டாளியை இன்றோடு கைவிட்டீரா ஐயோ!

(ஆண்டவன் விதிப்படியே என்ற மெட்டு.)

என்ன செய்வேன் ஏந்தலரே இப்போ
எங்குதையோ என்மனது
கன்னிமனது நொந்து காட்டில் புலம்பவைத்தாய் (எ)

மஞ்சள் குங்குமம் போச்சே என்
மன்னவரை பிரியலாச்சே
சஞ்சலமதிகமாச்சே சண்டாளியென்செய்குவேன் (எ)

பொட்டுயிடும் நெற்றியிலே பெரும்
பொல்லாங்கு நேர்ந்ததையோ
கட்டழகா மலரிழந்து கதரவிதிவசமோ (எ)

நாரத முனிவர் சொன்ன அவர்
நல்வாக்கு உண்மையாச்சோ
யாரால் வந்தவினையோ யாதுமறிகிலேனே (எ)
உன்னைவிட்டு நான்பிரிந்து எந்தன்
உத்தமரே வாழ்கிறேன்
என்னைத் தனியே விட்டு ஏமன்கை சிக்கினீரோ (எ)

சாவித்திரி வ-ம்—ஏ! பரம்பொருளே இக்கதிக்கு யான் ஆளாகினது உமக்கு சம்மதமா ஐயோ (சாவித்திரி கண்ணிற்கு எமதரிசனம் தோற்றுகின்றது ஏமனைப்பார்த்து) ஏ கருணைவள்ளலே.

தரு.

சாவி – சூலமுடன் நிற்பதாரையா எனக்குரைப்பீரே
எமன் - காலன் யானே எமபுரி வாழ்வோன்
சாவி - ஏனையா நீரிங்கு வந்தீர் ஏந்திழை எனக்குரைப்பீரே
எமன் சத்யவானின் உயிர் கவரவே
சாவி - ஏழையையா என் நாதன் உயிர் பற்றியதையுரைப்பீரே
எமன்– ஈசன் கட்டளையிது
சாவி - அவருடனே எனையும் அழைத்து ஏகுவீர் போற்றி ஐயா
எமன்- உந்தநாளும் முடிந்தால் நீ வா
சாவி - மாங்கல்யம் சூட்டிய மணவாளனை யான் பிரியேனே
எமன்- ஏனோ இவ்வித வாதுகள் செய்குராய் செல்-செல்-செல்
(எமன் செல்கிறான் சாவித்திரி முந்தாணி ஏந்தி பின் தொடருகிறாள்)

எமன் வ-ம்—ஆஹா என்ன விந்தையாக இருக்கின்றதே சாவித்திரி மகா பதிவிரதா சிரோன்மணிபோலுல் தன்புருஷன் இறந்ததைப் பற்றி என்னைத்தடுத்து பேசினாள் யான் என்ன ஏமனல்லவா.

சாவித்திரி வ-ம்—தர்மசொரூபா எனக்கு கிருபைகூர்ந்து மாங்கல்யபிச்சை தாரும் சுவாமி

எமன் வ-ம்—ஹா இதென்ன ஆச்சரியமாயிருக்கின்றதே சாவித்திரிதேவி ஏன் எந்தன்பின்னே தொடருகின்றாய் யான் ஈசன்கட்டளையை மீறமுடியாது அம்மணி.

சாவித்திரி வ-ம்—சகல உயிர்களுக்கும் தக்க தண்டனை விதிக்கும் தயாபரா இவ்வடியாளின்மீது தாங்கள் தயவுகூர்ந்து எவ்விதமாகிலும் என்கணவனுயிரைத் தரவேண்டுகிறேன் சுவாமி?

எமன் வ-ம்— அம்மா சாவித்திரிதேவி நீ வருந்துவதில் யாது பயன் பிடித்த உயிர்களை விடுவேனாகில் பூலோக மடங்குமா ஆதலால் உன்கணவனின் உயிரைத்தவிர வேறு ஏதேனும் ஒருவரம்கேள் அட்டியின்றி தருகிறேன்.

சாவித்திரி தரு.

கணவனையீன்ற மாமன்மாமி கண்தெரியசெய்யும் சுவாமி

சாவித்திரி வ-ம்—ஐயா தருமபூபதியே எனது மாமன்மாமி கண்ணற்று கானகத்தில் திக்கற்றவரைப்போல்தயங்கிக்கொண்டு இருக்கின்றனர், ஆதலால் அவர்களின் கண் தெரிய ஒருவரம்தாரும் சுவாமி.

எமன் வ-ம்—ஏ பதிவிரதாசிரோன்மணி நீகேட்டவரமளித்தேன் இனிமீதாகிலும் பின்தொடராது உன் அரண்மனைக்கேகுவாயம்மா.

(எமன் செல்கிருன்)

சாவித்திரி வ-ம்—ஹா என்னசெய்வேன் மலைந்துவிட்டாரே.

(சாவித்திரி போகிருள்)

## சீன் நெ-12. இடம்-இருளடைந்தகாடு

எமன் வ-ம்—கற்பில் மிகுந்த சாவித்திரிதேவி நாம் தந்த வரத்தைப்பெற்று சென்றுவிட்டாள் இனிமீதுவருகாள் ஆதலால் இனி நாம் நம்முடைய நகருக்குச் செல்லலாம்.

சாவித்திரி வ-ம்—சுவாமி தென்திசைக்கதிபரே தங்களின் பாதமே தஞ்சமென நம்பியிருக்கும் இவ்வடியாள் மீது அன்பு கூர்ந்து என் நாதனினுயிரைதாரும் சுவாமி.

எமன் வ-ம்—ஏ சாவித்திரிதேவி நீ கேட்டபடிக்கே வரமீய்ந்திருக்க நீ இந்த பயங்கரமான வழியெலாம் கடந்து என்னுடன் தொடர்வதில் பயனில்லை. ஆதலால் உன் ஆளன் உயிரைத்தவிர வேறு ஏதேனும் வரம்கேட்டால் அட்டியின்றி தருகிறேன்.

(சுருளிமலை மீதுமேவும் என்றமெட்டு)

மாமன்மாமி ராஜியத்தை யன்று துஷ்ட
மடையன்கஜக்கெதுகொண்டான் வென்று அது
மாகூஷிமையுடனே முன்போல் மேட்டிமையுடனேவர
இன்று தாரும் நன்று (மா)

சாவித்திரி வ-ம்—ஐயா செங்கோற்கடவுளே தாங்கள் இவ்வேழைமீது அன்புகூர்ந்து சதருவின் கையிலகப்பட்ட என்மாமன்மாமியின் ராஜியத்தை பழையபடி வரும்பொருட்டு வரமீயும் சுவாமி.

எமன் வ-ம்—சாவித்திரி நீ கேட்டவாரே வரம் தந்தேன் இனிமீதாகிலும் உன்னிருப்பிடம்செல். (எமன் செல்கிருன்)

சாவித்திரி வ-ம்—ஹா தர்மசொரூபா இவ்வடியாளை விட்டு சென்றுவிட்டீரே. (சாவித்திரி செல்கிருள்)

## சீன் நெ-13. இடம்-அக்கினியாறு.

எமன் வ-ம்—சாவித்திரி கேட்ட வரங்களெல்லாம் அட்டியின்றி கொடுத்திருக்கிறேன் ஆதலால் இனிமீது அம்மாது வருகாள் அப்படி வந்தாலும் இந்த அக்கினியாற்றை தாண்டி வரமாட்டாள் ஆதலால் நாம் சீக்கிரம் எமபுரிக்குச் செல்லலாம்.

சாவித்திரி வ-ம்—ஐயா சண்டாளர்களுக்கு தக்க இம்சைபுரியும் தருமரே இவ்வடியாளின் மீது நெஞ்சிரக்கம் வைத்tன கணவனுயிரைத் தாரும் சுவாமி.

எமன் வ-ம்—ஏ கற்புக்கரசி உன்காதலன் உயிரைத்தர எனக்கு கொஞ்சமேனும் உத்திரவு கிடையாது அப்படிகொடுத்தால் எனக்கு காத்தில் மான்மழுவேந்தும் கங்காதரனால்கடுமையான சிக்ஷைகளுண்டு ஆதலால் உன் ஆளன் உயிரைத் தவிர வேறு ஏதேனும் ஓர் வரம்கேள் தருகிறேன்.

சாவித்திரி வ-ம்—ஐயா தருமபூபதியே கணவனை யிழந்த சண்டாளியாகிய இப்பாதகிக்குபின் என்பெயரைச்சொல்ல ஒரு புத்திரபாக்கியம் வேணும் சுவாமி,

எமன் வ-ம்—சாவித்திரிதேவி உன்மன அபிப்பிராயப்படியே புத்திரவரமளித்தேன் நீ இனிமீது உன் இருப்பிடம் செல்

(எமன் போகிறான்)

சாவித்திரி வ-ம்—ஹா ஜெகதீசா எங்கனே சென்றுவிட்டாரே.

(சாவித்திரி போகிறாள்)

## சீன் நெ 14. இடம்-எமபுரி.

எமன் வ-ம்—அடே கிங்கிலியர்காள் நீங்கள் கோட்டைக்கதவை தாளிட்டு உள்ளே யிருங்கள் யார்வந்தபோதிலும் கதவைத்திரவாதீர்கள்

(எமன் போகிறான் சாவித்திரி வருகிறாள் தூதர் ஓடுகிறார்கள்)

சாவித்திரி வ-ம்— சுவாமி அடியாளை அங்கனே விட்டுவந்தீரே என்செய்வேன்.

எமன் வ-ம்—சாவித்திரி உனக்குவேண்டிய வரங்களெல்லாம்தந்திருக்க என்னை ஏன் வற்புருத்துகின்றாய்.

சாவித்திரி வ-ம்—தர்மசொரூபா என்னை தேவர்களறிய அஷ்டவசுக்களறிய மாங்கல்யம் சூட்டின மணவாளனைப்பிரிய மனம் வரவில்லை சுவாமி அதுவும் தவிர எனக்கு புத்திரபாக்கிய மீய்ந்தீரே என் நாதன் உயிர் இழந்த பிறகு எனக்கு புத்திரன் உண்டாகுவதற்கு என்னகாரணமிருக்கின்றது சுவாமி தாங்கள் கிருபைகூர்ந்து இவ்வொரு வரத்தை மாத்திரம் அடியேனுக்கு அனுக்கிரகிக்கவேண்டும்.

(மஞ்சி கஞ்சி காமாக்ஷி யென்றமெட்டு.)

பல்லவி.

மங்கையாள் சாவித்திரியாலே மோசம் போனேனே (ம)

அநுபல்லவி.

மன்மதி தகன நாதா மாதிவளைப் போலகாணேன் (ம)

சரணங்கள்.

மானிலத்திலிவளுமகா மார்க்கசாலியானவளோ
கானிலத்திலாளனுயிர் காடியென்னைத் தேடிமீட்டாள் (ம)
இவளல்லவோ பாக்யசாலி இன்னிலத்தில்யோக்யபாலி
தவமுனிவர்தினமும்போற்றும் தாரணியிலிவளும் சீலி (ம)

எமன் வ-ம்—அம்மணி சாவித்திரிதேவி நீதான் மிகவும் பதிவிரதா சிரோன்மணி ஆதலால் உன் மனோபீஷ்டத்தின்படியே உன் ஆளனுயிரைத் தந்தேன் ஆயினும் என்மனைவியாகிய ஜயமாலாவுக்கு பெண்களின் கற்பு நிலைமையை தெளிவாய் உரைப்பாய்.

சாவித்திரி வ-ம்—அப்படியே மகாபாக்கியம் சுவாமி.

சாவித்திரி-நொண்டிச்சிந்து,

அம்மணி கற்பு நிலைமை-அடியேன், அறிந்தவரையிலும் யான் எடுத்துரைப்பேன், ஊக்கமாக கேட்ப்பாய்-பெண்கள், உலகமதுதனிலே அவதரித்த, ஐந்தாம் வயதுதன்னில்-தாய்தந்தைக் கடங்கிதினமும்பள்ளிக் கேகவேணும், ஒன்பது பத்துவயதில்-தன்னுடைய, உத்தமபெற்றோர்கள் சொல்லும்புத்தி மதியை, கவனமாகவேகேட்டு-மனதில்,கனமுடன் நாணமச்சம் தன்னையேபூண்டு, இருப்பதுதானழகு-பிறகு, பொருத்தமுடன் பருவமடைந்தபின்பு, புருடர்கள் கண்களிலே-நாமும், புலப்படுவது நல்ல ஒழுங்கல்லவே, மணமதுமுடிந்தபின்பு-ஆளனிடம், மகிழ்வாய் அடக்கமுடனிருக்கவேணும், பரபுருடரைக்கண்டால்-கண்ணால், பார்ப்பதுவும் பெண்களுக்கழகல்லவே, தேவர்கள் சாக்ஷியாக - புருஷனை, தினமும் துதித்துநாமும்வாழவேணும், இதைப்போலனேகபெண்கள்-நடந்த, இதிகாச புராணங்களை எடுத்துரைப்பேன், அனுசூயை அருந்ததியும்-இன்னும், அகலிகை தமயந்தி பாஞ்சாலியும் சுங்கரிவாசுகியும்-நல்ல, சந்திரமதியுடனே வெண்காட்டுநங்கை-இவர்களின் குணமதைப்போல்-நாமும், இருப்பதுதான் நல்ல அழகுசொன்னேன், உரித்தமாய் தாலிதரித்த-புருஷன், தரித்திரவானாக இருந்தபோதிலும், மொண்டி ஊமை முடவனாகினும்-கெட்ட, மூடபுத்திதன்னைபூண்டோனானபோதிலும், கைவிடலாகாதம்மணி-கணவன், கருத்தின்படிநடத்தல்மிகவும் நன்று, இதைப்போல் நடப்பவர்கள்-உலகில், இணையில்லாபதிவிரதா எனச்சொல்லலாம், எந்தன் கணவனுடனே-யானும், எகிமேய்பூதலந்தன்னில் சுகித்திருக்க, வாழத்திவிடைகொடம்மா-உந்தன், வாகைமலர்தான் தொழுதேன் எந்தனம்மணி,

எமன் வ-ம்—அம்மணி சாவித்திரிதேவி உன் அபீஷ்டப்படியே உன் ஆளனை எழுப்பித்தருகிறேன் வாருமம்மணி, பூலோகத்திற்குச் செல்லலாம்,

(எமனும் சாவித்திரியும் பூலோகத்திற்குச் செல்கிறார்கள்)

சீன் நெ-15, இடம்-காடு.

எமன் சத்தியவானை எழுப்புகிறான்.

எமன் வ-ம்—சத்தியவந்தா எழுந்திரு பயப்படாதே.

சத்தியவான் வ-ம்—ஹா கண்மணி சாவித்திரி என்னசெய்வேன் ஐயோ ஏதோ கோரரூபமாக தோன்றுகிறதே.

சாவித்திரி வ-ம்—நாதா பயப்படாதீர் இவர்தான் தங்களுயிரைக் கவர்ந்த தென்திசைக்கோன். (நாரதர் வருகிறார்)

நாரதர் வ-ம்—எமதர்மா மங்களமுண்டாகுக ஏதுகாரணார்த்தமாக இங்கு வந்தீர் இவர்களெல்லாம் யார்.

எமன் வ-ம்— சுவாமி ஒன்றுமறியாதவர்போல வார்த்தையாடுகின்றீரே.

நாரதர் வ-ம்—எமதர்மா ஆதியில் என்சொல்லைக் கேளாமல் என்னைக் கடிந்து சினக்கமுயன்றீரே அதுசமயம் யான் கூறிய சபதம்வெலித்ததா அல்லது உன் சபதமே கெலித்ததா பார்த்தீரா.

எமன் வ-ம்— முனிசிரேஷ்டரே எல்லாம் தங்களின் சூக்ஷியென அறிந்துக்கொண்டேன் ஆயினும் தாங்கள இவர்களுடன் சாலவபுரிக் கேகி இந்த சத்தியவானுக்கு பட்டம் சூட்டி ஆசீர்வதித்தேகுங்கள் யான் போகிறேன்.

(எமன் போகிறான் சத்தியவானுக்கு பட்டம் சூட்டுகிறார்கள்.)

விருத்தம்.

நன்னூலும் இலக்கணமு முணர்ந்தோனல்ல
நலமான புராணங்களைப் படித்தோனல்ல
இன்பமுடன் கவிசொல்ல தெரிந்தோனல்ல
இதமுடனே குருவாக்கை யுடையோனல்ல
அன்புடனே சென்னைநகர் தனிலேவாழும்
அறியாத பாலன் தியாகராஜன்யானும்
சென்னிமலை வேலவனின் அருளினாலே
ஜெகமதிலே கற்றவன்போல் பாடினேனே.

சாவித்திரி டிராமா

முற்றிற்று.


148393



டைட்டில்பேஜி மாத்திரம் சென்னை:

சுந்தரம் அச்சுக்கூடம்.

---

